உ.

சிவமயம்.

# நெல்லையந்தாதி.

புதுவைச்சிவகாமசவுந்தரிமாலை.

திருச்செந்தில் வெண்பாவந்தாதி.

புதுவைவயித்தீசுரர்இரட்டைமணிமாலை.

திருநெல்வேலி ஸ்ரீகாந்திமதியம்மன்பதிகம்.

திருச்செந்தூர் மாதாந்தக் கலித்துறை.

குறுக்குத்துறைக்குகன் பதிகம்.

கழுகுமலைக்கந்தர் பதிகம்.

சீராசைக்கோமதியம்மன் பதிகம்.

இவை

திருநெல்வேலி டிஸ்டிரிக்ட்டுக்கோர்ட்டுப்பிளீடர்

**S. M. தையல்பாகம்பிள்ளை**

அவர்களால்

இயற்றப்பட்டு

திருவாங்கூர்சமஸ்தானம் செங்கோட்டை டிவிஷன்

சூப்பர்வைசர்

சந்திரபானுலாலா அவர்கள்

விருப்பத்தின்படி

சங்கரநயினார்கோவில்தர்மகர்த்தாவாசுதேவகல்லூர்

சிவ. நல்லகண்ணுப்பிள்ளையவர்களால்

திருநெல்வேலி

ஆரியப்பிரகாசினி அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டன.

1897

உ

சிவமயம்.

# சாத்துகவிகள்.

திருநெல்வேலி வித்வான் கவிராஜ

நெல்லையப்பபிள்ளையவர்கள்

இயற்றிய

நேரிசைவெண்பா.

எல்லையந் தாதியிலா வேணுவனத் தீசர்தம்மேல்
நெல்லையந் தாதி நிகழ்த்தினன்—முல்லை
முருந்தையன மூரலுமை முண்டகத்தாட் கன்பு
தருந்தையல் பாகவா சன்.

திருநெல்வேலியில் இயற்றமிழ்த்தலைமைப்புலமை
நடாத்திய மஹாவித்வான்
அம்பலவாணன் கவிராஜரவர்கள் குமாரர் கவிராஜ
முத்துக்குமாரசுவாமியாபிள்ளையவர்கள்
இயற்றிய

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

மாகனகவெற்பன்னுள்வளைத்தநெல்லையனவாதன்வடிவாமாது
பாகனகத்தன்படியார்க்கருள்சற்கந்தாதிபாடினனல்
கோகனகவாவிநிகழ்வில்லிபுத்தூர்மணிமுத்தாங்குரிசில்பெற்ற
வாகனகலத்தமர்பானற்றையல்பாகப்பேர்வளாபூமானே.

திருநெல்வேலி டிஸ்டிரிக்ட்டுக் கோர்ட்டுப்பிளீடர்
T. S. சுப்பிரமணியபிள்ளையவர்கள்
இயற்றிய

நேரிசைவெண்பா.

தொல்லைவினை நீக்கிச் சுகமருளு மீசன்மேல்
நெல்லையந் தாதி நிகழ்த்தினன்—எல்லையிலா

மையலா ரிவ்வுலகோர் வாழ்ந்திடவே நம்மருமைத்
தையல்பா கக்கவிஞன் றான்.

திருநெல்வேலி தெற்குப்புதுத்தெரு
பால்வண்ணமுதலியாரவர்கள்
இயற்றிய
நேரிசைவெண்பா.

கண்ணமரு நெல்லைவளர் காந்திமதி நாதருக்குப்
பண்ணமரு மந்தாதி பாடினன் — அண்ணல்பணி
கையொருவா னின்பக் களிப்பொருவான் கல்விமிகுந்
தையல்பா கக்குரிசி றான்.

ஒட்டப்பிடாரந்தாலூகா ஒநமாச்குளங் கிராமமுன்சிபு
வித்வான்
சிவ. கயிலாசநாதபிள்ளையவர்கள்
இயற்றிய
அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

செய்யவேணியன்சாலிவாடியில்வாழ்நெல்லையப்பர்திருத்தாண்மீது
மையன்மாசிருளகற்றும்பூமாலைதொடுத்தணிந்துவணங்குமன்பாற்
பொய்யில்சிவாகமநெறிகைக்கொடுமனுநூன்முற்றுணர்மெய்ப்புகழ்
வல்லோனுக், தையல்பாகப்புனிதனந்தாதித் தொடைநூறுஞ்சாற்
றினனே.

[ன்
நலங்கொள்திருநெல்வேலித்தென்புதியவீதிதனினண்ணிவாழ்வோ
வலங்கொள்ஹைக்கோர்ட்டார்களணர்மகிழ்வுறப்பிளீடர்நெறிவழா
துசெய்வோன்,பலன்கடருபாணடிக்கிட்பத்திமிகுந்தர்மகர்த்தாபல்
லோர்வாழ்த்தத், துலங்குதையல்பாகமுதெனப்பாகமாயிந்நூல்
தொடுத்தான்மாதோ.

சங்கரநயினார்கோவில்த்தாலூகா வாசுதேவநல்லூர்
வித்வான்
பழனியாண்டிப்புலவரவர்களியற்றிய
அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

வந்தாதியெனவளருநெல்லையப்பர்க்கமுதவசனத்தினாலே [சத்
அந்தாதியெனும்ப்ரபந்தமருமையுடனறைந்தனனென்றோர்கண்மெச்
தந்தாதியன்றபடிதருந்தையல்பாகயதருமமாலே.

ஷெடியூர்

## திருமலையாண்டிக்கவிராயரவர்களியற்றிய

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

தங்கமலைவில்வல்லான்சீர்திருநெல்வேலிவளர்தகைமைமேலாய்த்
தங்கமலைவான்பதத்திலந்தாதித்தொடைசூட்டித்தயைபெற்றான்மா
தங்கமலைவண்கயத்திலழைக்குமுனேபோய்க்காத்தோன்றனதில்
லாள்வே, தங்கமலைவசிக்குமுயமொழிற்றையல்பாகமெனுந்தக்கோன்
றனே.

திருநெல்வேலி திருப்புகழ் சுவாமிகளென்றும் முருகதாச
சுவாமிகளென்றும் விளங்குகிற ஸ்ரீமத் தண்டபாணிசுவாமிகள்
சகோதரரும் மாணாக்கருமாகிய

## சித்திரபுத்திரபிள்ளையவர்கள்

இயற்றிய

நேரிசைவெண்பா.

திருவில்லி புத்தூர் ஜெனித்த புனிதன்
பொருவில்லை யல்பாகப் புத்தேள்—அருவுருவா
யந்தாதி யான அனவரத தானர்மிசை
யந்தாதி சொன்னானன் றாய்.

தையல்பா கப்புனிதன் சாற்றுநெல்லை யந்தாதி
மையல்பா கந்தீர்க்கு மாமருந்தா—மெய்யன்பு
கொண்டவர்க்குப் பேரறிவாங் கோலா கலமிகுந்த
தண்டமிழோர்க் கின்னமுதந் தான்.

பொன்பூவில் வாசம் பொருந்துவது போலவே
யின்பூறுங் கல்விசெல்வ மேய்ந்ததன்றி—பன்பாருந்
தையல்பா கப்பேர் தருமகர்த்தா நீதிசொலல்
தெய்வபத்தி யுஞ்சேர்ந்த தே.

திருநெல்வேலியிலிருக்குந் தட்டப்பாறை வித்வான்

## உமையொருபாகம்பிள்ளையவர்கள்

இயற்றிய

### கலிவிருத்தம்.

மையல்கூர்மடவாரின்மயக்கறத்
தையல்பாகமெனும்பெயர்தாங்கினோன்
பையராவணிநெல்லைப்பரமனை
யையன்மீதிலந்தாதிசொற்றனனோ.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

முத்திரகசிய நூலையுணர்ந்தவர்சூழ்நெல்லையினின்முதன்மையாச்ச
கத்திரவோர்க்கருளுந்தையல்பாகமகிபனெனுங்கருணையோன்சொல்
பத்திரசமிப்பொருந்தந்தாதிதனைக்கேட்கின்மாப்பாவையோடு
சித்திரமுந்தலையசைத்துமெய்ஞ்ஞானப்பெற்றுய்தல்திண்ணந்தா
னே.

திருநெல்வேலியிலிருக்கும் பண்பொழி

## ஷண்முகசுந்தரம்பிள்ளையவர்கள்

இயற்றிய

### நேரிசைவெண்பா.

செந்நெல்வளஞ் சூழ்நெல்லைச் சேவகன்மே லந்தாதி
கன்னல்ரச மும்நாணக் கற்பித்தான்—பொன்னகராம்
வில்லிபுத்தூர்க் கங்கைகுல மேன்மைமணி முத்தருமைச்
செல்வதையல் பாகேந் திரன்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பாடவல்லேனலனொருவர்பாடியபாட்டினையெவரும்படிக்கக்கேட்கக்
கூடவல்லேனலன்யாவர்கற்பிப்பார்கற்றுணர்ந்துகொள்வோமென்னத்
தேடவல்லேனலனீசெய்செய்யுள்சரிபார்த்திடயான்திறனென்றுன்
பா, நாடவல்லேனலன்தையல்பாகநின்னூற்கிணையெதென்றுநாட்டு
வேனே.

சிவமயம்.

# நெல்லையந்தாதி.

## காப்பு.

### நேரிசைவெண்பா.

செந்தா மரையனஞ்சேர் செய்வலஞ்சூழ் நெல்வேலி
நந்தா வருநெல்லை நாயகர்மே—லந்தாதி
சிந்தித் தியற்றத் திறமளித்துக் காத்தருளுஞ்
சந்தி விநாயகன்பொற் றாள்.

## நூல்.

### கட்டளைக்கலித்துறை.

சீர்தங்கு வான்றிரு நெல்வேலி யிற்செழித் தேதிகழும்
வார்தங்கு காந்தி மதிகொங்கை தோய்மண வாளவென்பாத்
தார்தங்கு கின்பதத் தேசாத்த நாடுந் தமியனுக்கே
யேர்தங்கு நற்பொரு ளும்வாக்கும் ஞானமு மீந்தருளே. (௧)

அருள்பழுத் தோங்குஞ் சுகானந்த மேயமு தாமாசே
தெருள்பழுத் தோங்குஞ்செழும்பொரு ளேநற் சிவக்கொழுந்தே
யிருள்பழுத் தோங்கு மனத்தே னுக்கும்இரங் கேர்மறையின்
பொருள்பழுத் தோங்கும் புனிதாநெல் வேலியிற் புண்ணியனே. ()

புண்ணிய னேயயன் மாலுக்கு மின்பப் பொருளளிக்குந்
திண்ணிய னேதிரு நெல்வேலி மேவித் தெளிந்தவரு
ள்ண்ணிய னேபர னேயெனை யாண்டரு ளாய்ந்தகொன்றைக்
கண்ணிய னேகங் கானே கருணைக் கருங்கடலே. (௩)

கடலே யனைபதுன் பத்தாழ்ந் துழலிக் கடையனைக்கை
விடலேர் விரிசடை யாய்விட மேவு மிடற்றவனே
யடலே றுவந்த வருட்கட லேநெல்லை யம்பலவா
வுடலே மருவு முயிர்போ லொளிரு முமாபதியே, (௪)

பதியே பரஞ்சுட ரேபருண் ஞானம் படர்ந்தபரா
கதியேயென் கண்ணுட் கருமணி யேநற் கனிகருணை
நிதியேயென் னுள்ள நிறைவேநெல் வேலியி னின்மலமே
மதியேய் சடையண்ண லேயென்னை யாள மனமகிழே. (ரு)

மனமகிழ்ந் தாட்கொண்டென் குற்றமெல் லாவற்று மன்னித்தன்ப
ரினமகிழ்ந் தேகிநின் பாதார விந்த மிறைஞ்சிடவிற்
பனமகிழ்ந் தேயடி யேற்கருள் வாய்படைப் பானும்விண்டும்
தினமகிழ்ந் தேத்தும் படிநெல்லை மேவிய தேசிகனே. (சு)

தேசு நிறைந்துயர் தேவேநின் செய்ய திருவடிக்கண்
ணாசு மதுர கவிமாலை சாத்திமெய் யன்புசெய்தென்
மாசு படிந்த பவவினை நீக்க வகையருள்வாய்
வீசு புகழ்க்கொன்றை யாராநெல் வேலி விடையவனே. (எ)

விடையவ னேவெவ் விடையங் கடந்தொளி மேவுவிண்ணீர்ச்
சடையவ னேயரு ளச்சடை யாயித் தமியனையே
கடையவ னேயென்று கைவிட்டி டேன்முன் கணிகைபின்பா
னடையவ னேநன் னடையவ னேநெல்லை நாயகனே. (அ)

நாயக மேயடி யார்நல மேயெந்த நாளிலுமன்
பாயக மேவி யருளென வேநல்ல பத்திபுரி
வாயக மேயினி நாம்வாழ்வ தற்கு வகைபுரியத்
தாயக மேதிரு நெல்வேலி வாழ்சிவ சங்கரனே. (கூ)

சங்கங்க ளங்கயற் கண்சத்தி காதலன் சாகரஞ்
சங்கங்க ளங்கர நெல்லையிற் றாணு சரணுறச்சற்
சங்கங்க ளங்கங் கடைந்தனங் காணினிச் சண்டனுக்க
சங்கங்க ளங்கங்க ளில்லையெக் காலுநெஞ் சங்கரைந்தே.

(இதனது பதப்பொருள்) சங்கம்-சங்கைப்போன்ற, களம்-கழுத்தை
யும், கயல்-கயன்மீனைப்போன்ற. கண்-கண்களையுமுடைய, சத்திகாதலன்-
உமாதேவியின்நாயகனாகிய, சாகரஞ்சம்-சமுத்திரத்தினின்றுண்டாகிய வி
டத்தையும், கம்-பிரமகபாலத்தையும், களங்கரம்-கண்டத்திலுங் கையிலு
த[illegible]த, நெல்லையிற்றாணு-நெல்லைமாநகரத்திலெழுந்தருளியிராநின்றதாணு
[illegible]ருடைய, சரணுற-பாதாரவிந்தத்தைச்சேர, சற்சங்கங்கள்-சற்சனர்களு
டையசகவாசத்தை, அங்கங்கடைந்தனம்-ஆங்காங்கேயடைந்தனம், காண்

காண்பீராக, இனி-ஆதலாவினிமேல், எக்காலும்-எந்தக்காலத்திலும், நெஞ்சங்கரைந்து-மனமுருகி, சண்டனுக்கசங்கம்-யமனைக்கண்டஞ்சோம், களங்கங்களில்லை-சந்தேகமில்லை (எ-று). எ-ஈற்றசை. (௰)

கரையறி யாக்கரு ணைக்கட லேகருங் கற்பகமே
யுரையறி யாமறை யொண்பொரு ளேயுன் னுயர்வுறுமன்
பரையறி யாவெனக் குங்கடைக் கண்ணருள் பாலிப்பையோ
புரையறி யாமணி யேநெல்லை வாழ்பரி பூரணனே. (௰க)

பூரண னேநெல்லை யாயன் மாலுங்கண் பூத்தறியாக்
காரண னேயென் றுனைமறை பேசினுங் காப்பதற்கு
தாரண னேயன்பர் நன்மனத் தேசிக்குர் தன்மையனீ
யாரண னேயத னுலடி யார்க்கெளி யானென்பரோ. (௰உ)

என்பரி தாப நிலைநீ யறிந்து மிரங்கிலையே
யின்பரி தாமிச் செகமீ திடர்படிற் றேதியங்கு
மன்பரி தாமனத் தேழையன் செய்வகை யாதறையாய்
வன்பரி தாமளி வாரிதி யேநெல்லை மாமணியே. (௰௩)

மணியே யிருகண் மணியேநெல் வேலியில் வாழ்கின்றநிற்
குணியே யிருங்குணி யேவிடை யாய்க்கொண்ட கோதறுமுக்
கணியே யருகணி யேயடி யேனின் கழல்பணியப்
பணியே யரவப் பணியே புனைந்த பராபரமே. (௰ச)

பரகதிக் கேகக்கண் பாலிப்பை யோபடு பாவிகள்செல்
நரகதிக் கேக நடாத்துவை யோவொன்று நானறியேன்
வரகதிக் கேசெல் வகையருள் வாய்மனம் வைத்திரங்கிச்
சரகதிக் கேசெல் விடையாய்நெல் வேலியிற் றூரகமே. (௰ரு)

ஆகமே யினியுனக் கச்சமென் னேவரு மையமென்னே
மகமேனைச் சார்ந்திட்ட காகமும் பொன்னிற மாகுமன்றோ
சகமேநெல் வேலித் தனிமுதற் கேவிலை தான்சமைந்துஞ்
சுகமே யிருநமக் கேதாய் கயிலை சுதந்தரமே. (௰சு)

தந்தா மேபுரிந் தாள்விலை கொள்தனத் தாரைநப்பி
யந்தா மேநின் றலையவை யேலன் றமரருக்காக்
கந்தா மேகாங் காத்தருள் செய்கரு ணாகரமே
சுந்தா மேதிரு நெல்வேலி வாழுஞ் சுகானந்தமே. (௰எ)

ஆனந்த மேநின் விலையா ளடிமையென் றுனதிரு
ஞானந்த மேனிகண் ணில்லா தவர்க்கு நடுக்கமுறேன்
கானந்த மேர்செவி புக்கிய ராவணற் காத்தருணீ
தானந்த மேயில் பொருளல வோநெல்லை சார்முதலே. (௰௮)

முதலேயி லாதிய நேர்முட னென்னநின் மொய்கழலேத்
துதலேயி லாதுன் னருள்விழை வேற்குஞ் சுகமளிக்கச்
சிதலேயி லாவருள் செய்வாய் சிறிதுஞ் சினமுடன்செப்
புதலேயி லாத்திரு நெல்வேலி வாழும் புராதனனே. (௰௯)

தனத்தலங் காரத் தடங்கயற் கண்ணியெந் தாயணிசந்
தனத்தலங் காரந் தனக்கிசைந் தான்தடி தன்னிலுதித்
தனத்தலங் காரத ராய்த்தயங் குந்தகை சார்நெல்லைநா
தனத்தலங் காரண நின்றெனை யாட்கொளத் தங்கினனே.

(இ-ள்) தனத்து—முலையினிடத்து, அலங்கு-அசைகின்ற, ஆரம்—முத்துமாலைகளையுடைய, தடங்கயற்கண்ணி—விசாலம்பொருந்தியகயன்மீன்போலுங்கண்களையுடையகாந்திமதியம்பாளாகிய, யெந்தாயணி—எமது தாயணியும், சந்தனத்தலங்காரந்தனக்கு-சந்தனத்தையணிந்தலங்காரஞ்செய்துகொள்வதற்கு, இசைந்தான்-இசைந்தவனாகிய, தடிதன்னில்-வயல்களில், உதித்த-உண்டாகிய, நத்து-சங்குகள், அலங்காரதராய்-கலப்பைச்சாரலிலே நிற்கின்றஜலத்தின்வழியாக, தயங்குந்தகைசார்—ஊர்ந்துசெல்லத்தக்கதன்மைபொருந்திய, நெல்லைநாதன்—நெல்லைமாநகரத்திலெழுந்தருளியிராநின்ற சிவபெருமானானவர், அத்தலம்—அந்தத்தலத்தில், காரணநின்று, மேகத்தைப்போனின்று, எனையாட்கொள-என்னையடிமைகொள்ளும்பொருட்டு, தங்கினன்-வீற்றிருந்தருளினார் (எ-று) ஏ-ஈற்றசை. (௨௰)

தங்கரும் பேர்புக ழோங்குநெல் வேலி தழைக்குமுக்கட்
செங்கரும் பேசடை மீதொரு மாதைச் சிறையில்வைத்துக்
கொங்கரும் பேர்முலை மற்றொரு மாதைக் குலாவியவாண்
இங்கரு நீயென வேசெப்பு வாரிச் செகத்தவரே. (௨௧)

தவரா யினுஞ்சற் சனரா யினுநற் றருமங்கள்செய்
பவரா யினும்படைப் பாரா யினுநற் பதமுயர்வா
னவரா யினுநினைப் போற்றுரனிநெல்லை நாயகனே
எவரா யிருக்கினு மென்னே யெனக்கினி யாரவரே. (௨௨)

இனியா ரெனக்குற்ற தாயக நீயன்றி யேயிந்தமே
தினியா ரெவருந் திறமுள ரோகடைத் தேற்றுவிக்கத்
தனியார் வளந்திரு நெல்வே லியிற்சிவ சங்கரநீ
கனிவார் கடைக்க ணருள்புரி யாதெனைக் கைவிடிலே. (௨௩)

கைவிட் டிடாது கடைகா றுமென்றனைக் காத்தருள்வாய்
மைவிட் டிடாவிழி மான்மான காந்தி மதியையென்று
மெய்விட் டிடாத வியனொளி வேசடை மேலொருமா
தைவிட் டிடாத தயாநிதி யேநெல்லை சார்தனியே. (௨௪)

சாருந் தவமுடை யோர்தனைக் காத்தல் சகசமதிற்
பேரும் பிரபல மும்வாய்த் திடாதுனக் குப்பெரிதா
யாரும் வியப்ப வடியேன் வினைதவிர்த் தாண்டுகொண்டா
னேரும் புகழ்மிக நெல்வேலி வாழா னேநினக்கே. (௨௫)

நினக்கே தெரியுமென் வண்டோல மென்றுமிந் நீள்புவியோர்
தனக்கே பழிப்புக் கிடம்வைத் திடேலென் றனையவர்கள்
கனக்கேடு செய்யி னுனக்கழ கோநற் கருணைவைத்தென்
மனக்கேத நீத்தருள் வாய்நெல்லை மேவிய மாமருந்தே. (௨௬)

மருந்தேநின் மாணடித் தாமரை யேத்து மனந்துணியார்
பருந்தே தனதென நாய்நரி தங்கள் பசிக்குதவும்
விருந்தே யெனச்சொல வீணைப் போக்கியிம் மேதினியி
லிருந்தே னிராம லிறந்தேனெல் வேலியி னின்பெருக்கே. (௨௭)

பெருக்கேனெ னன்பைநின் மாணடி காணவென் பேதைமன
முருக்கே னிராப்பக லாய்த்தொழு தேத்திட வூரிலுள்ள
வருக்கே வுழைத்திளைத் தேனினி யுய்யும் வகையருள்வா
யெருக்கே ரலங்க லணிநெல்லை யாய்சற் றிரக்கம்வைத்தே. (௨௮)

இரக்கம்வைத் தேயெனை நீயாள்வ தற்கிசை யேலெனிலோ
புரக்கவல் லாரினி யார்புக லாய்நின் புகழ்க்கழகா
திரக்கண் ணுதற்பெருங் கோவேதண் சோலை திகழ்நெல்லைவாழ்
சரக்கட லுண்டன் றமரரைக் காத்திட்ட கந்தரனே (௨௯)

கந்தரங் கானந் தனந்தனிற் றங்கக் கடுக்கையசோ
கந்தரங் கானந் தருநெல்லை நாதநின் காலிலநே
கந்தரங் கானந் தலர்சொரிந் தேத்துங் கருத்தருள்சு
கந்தரங் கானந்தந் தந்தெனை யாளக் கடனினக்கே.

(இ—ள்) கந்தரம்-மேகமானது, கா-சோலைகளிலும், நந்தனந்தனில்-நந்தனவனங்களிலும், தங்கு-தங்குதலினால், கடுக்கையசோகந்தரு-கொன்றைமரங்களும் அசோகமரங்களும், அங்குஆனந்தரும்-அந்தவிடத்தின்மதுவைத்தரும்படியான வளம்பொருந்திய, நெல்லைநாத-நெல்லைமாநகரத்திலெழுந்தருளியிராநின்ற சிவபெருமானே, நின்காலிலநேகந்தரம்-அநேகந்தரம் நின்பாதாரவிந்தத்தில், கானகந்துஅலர்-வாசனையிருந்தமலர்களை, சொரிந்தேத்தும்-அர்ச்சித்துத்தொழும்படி, கருத்தருள்-அடியேனுக்குச்சித்தத்தைத் தந்தருள்வீராக, சுகந்தரங்கு-எனெனில்சுகந்தங்கும்படியான, ஆனந்தந்தந்தெனையாள-பரமானந்தத்தைக்கொடுத்து அடியேனை யாண்டருள்வது, கடனினக்கு-நினதுகடமையாகவிருக்கின்றது (எ—று) எ—சுறறசை. (கூ௰)

கடத்தைச் சதமென நம்பியந் தோவிந்தக் காசினியில்
விடத்தைப் புரைவிழி யாரனு ராகம் விழைந்தவர்க
படத்தைப் பகுத்தறி யாதயர்ந் தேநெல்லைப் பண்ணவனே
திடத்தைக் கொடுத்தருள் வாயெளி யேன்கதி சேர்வதற்கே. (கூக)

சேரும் புகழ்த்திரு நெல்வேலி வாழ்ச சேசிரசி
னீரும் நிலவு மணியுமென் தாய்நின்ற னீளடியைச்
சாரும் படிக்குத் தமியேற்குச் சற்சன சங்கமுநற்
சீரும் அசோக திடகாத் திரமுஞ் செழிக்கநல்கே. (கூஉ)

கல்லாத புல்லர்தம் பாற்சென்றி ரந்தென்ற னாட்கழித்தன்
மல்லாத வண்ணம் வகையருள் வாய்நெல்லை மாணிக்கமே
பல்லாதஞ் சென்றுய ரீரே ழுலகமும் பார்க்கினின்போ
லல்லா தருள்செய வல்லாரங் காரு மறிவரிதே. (கூங)

அரியா சனத்த ரமைச்சான் றோர்பொருட் காவவர்பின்
றிரியா சறச்செய்வ தென்றோவிவ் வேழை திகைத்துநிற்றல்
சரியாசம் போநெல்லைத் தாணுசற் றேனுநின் றாட்கன்பிலார்
பரியாசம் பண்ணவை யாதெளி யேனைக்கண் பாரினியே. (கூச)

இனியே துனதருள் வாய்த்திடு மோவென வேங்கியெனுள்
கனியேதுன் புற்று நலிகின்ற தாலெந்த னல்குரவைப்
பனியேழ் பரியுடை யானைக்கண் டாங்கு பணித்தருள்வாய்
தனியே கழனி புடைசூழ்நெல் வேலித் தயாநிதியே. (௯௫)

நிதியோங்கி யேவளர் நெல்வேலி மேவிய நீள்சடையாய்
ததியோர்க் கிலைகொ லுணைநாடு நான்சஞ் சலப்படல்சம்
மதியோநின் னெஞ்சங்கல் லானது மென்மட்டு மாவலதென்
விதியோ வறிந்தில னேயுய்ய வேலிதம் விண்டருளே. (௯௬)

விண்டங்கண் டானுமிம் மேதினி யோவொளி மேவுபல
அண்டங்கண் டானக்க மும்அறி யாநின்ற ஞலமுண்ட
கண்டங்கண் டானந்த மாயின னெல்லைக்கங் காதலித்
தொண்டங்கண் டாளப்பல் தெண்டங்கண் டாய்நின் துணையடிக்கே.

அடியே கதியென நம்பிய பேர்கட் கருள்சுரக்கும்
படியே திருவுருக் கொண்டநெல் வேலிப் பரஞ்சுடரோ
துடியே நிகரிடை யார்மய லீக்கிக்கை தூக்கியருள்
பிடியே தும் வேறிலை நின்றுளல் லாலிந்தப் பேதையற்கே. (௯௮)

பேதைமை நீங்கிடு நற்குண மொன்றும் பெரிதுமரி
யாதையுஞ் செய்வ ருங்கீர்த்தி நானுண் டமித்திருக்
தீதையுன் ஞர்திரு நெல்வேலி மேவிநற் சீர்திகழுந்
தாதையெந் தாயுன் னருள்பெறுங் காலினிச் சந்ததமே. (௯௯)

சந்தத் தனத்திக டந்தொழி லிந்திர சாலஞ்செல்லாச்
சந்தத் தனத்திர டாசுந் தாற்கன்று தானடந்த
சந்தத் தனத்தி யுரித்தோ யெனக்கரு டாகயல்கஞ்
சந்தத் தனத்தினந் தண்ணல்லி சார்நெல்லைச் சங்கரனே.

( இ-ள் ) சந்தாற்கன்று-முன்னோர்காலத்திற்சுந்தரமூர்த்திசுவாமி களுக்காக, சந்துதானடந்த-(பரவை நாச்சியாரின் ஊடல் தனிப்பான்) தூது சென்ற, அத்தன்-கடவுளே, அத்தியுரித்தோய்--யானையின்றோலை யுரித்த வனே, கயல்-கயன்மீன்கள், கஞ்சந்தத்த-தாமரையின்மேற்றத்தியேற, நத் தினம்-சங்குக்கூட்டங்கள், தண்ணல்விசார் - குளிர்ச்சிபொருந்தியஅல்லி யின் மேற்சேரும்படியான வளப்பமுடைய, நெல்லைச்சங்கரனே-நெல்லைமா நகரத்தி லெழுந்தருளியிராநின்ற சிவபெருமானே, சந்தத்தனத்திகள்தம்-சந்

தனத்தையணியுந்தனங்களையுடையமாதர்களின், தொழிலிந்திரசாலஞ்செல்லா—தந்திரத்தொழிலினாற் செய்யுமிந்திரசாலங்களிற்செல்லாத, சந்தத்தனத்திரள்தா—வாய்ந்தபொருட்குவியலைத்தா, எனக்கருள்தா—அடியேனுக்குக்கிருபைதந் தருள்வீராக. (எ-று) (௪௰)

சங்கக் குழைபணிந் தானைநெல் வேலியிற் றாணுவைமா
தங்கக் கிரியைச் சிலையா வளைத்த தடக்கையனைத்
திங்கட் சடையனைச் சிந்தைசெய் வாய்மயல் சேருலகி
லங்கச் சுமைகொண் டலைந்தநெஞ் சேநம்மை யாட்கொளவே. ()

ஆளே யடிமை யெனமுன்பு பாணருக் காவுவந்து
வாளேய் நெடுங்கணெல் வேலியிற் காந்தி மதிவருடுந்
தாளே வருந்த விறகெடுத் தோய்நின் தயைகிடைக்கு
நாளேநன் னாளந்த நாளிந்த நாய்க்கெந்த நாணண்ணுமே. (௪௨)

நண்ணுமிச் சென்மங் கடைத்தேறி நாமுய்ய நல்வழியை
யெண்ணுவ தாயினெஞ் சேயென் னுடனிசைந் தின்றுமுதற்
கண்ணுத னெல்லையி லம்பல வாணன் கழல்கருதிப்
பண்ணுமெய்ப் பூசை யவனருள் கதியெனப் பாடுவையே. (௪௩)

பாடாமற் புல்லனைப் பாழ்க்குழை யாமற் பரசமய
நாடாம னல்குச வெய்தாம னின்னடி நாடிலற்பாற்
கூடாம னின்தொண்டர் கூட்டம்வி டாமலென் கும்பிக்கிரை
தேடாமல் வாழ்செல்வந் தாநெல்லை மேவிய சின்மயனே. (௪௪)

சின்மய னேநற் செழும்பொரு ளேயுயர் சிற்பரம
தன்மைய னேசிவ சங்கர னேதண் சதாசிவனே
நன்மைய னேயெனை யென்றுகொண் டாண்டரு ணல்குகசெம்
பொன்மய னேதிரு நெல்வேலி மேவும் புராந்தகனே. (௪௫)

புரந்தான் முன்னைப் பழிதீர வேவம் புயமதனை
நிரந்தரஞ் சாத்தினன் றேத்திநின் றூனுக்குண் ணீள்கருணை
சுரந்தாங் கைதவிர்த் தாய்நெல்லை யாய்மதன் றாய்மலராற்
துரந்தா சாத்திய தற்கவற் காய்ந்ததென் சொல்லுகவே. (௪௬)

சொல்லிய மூவர் தமிழ்மாலை சூடிய தூயவவெண்
புல்லிய நாத்தரும் பாமாலை யையன் புடன்புனைவாய்
மெல்லிய வைந்தரு நாண்மலர் சாத்தும் வியன்சடைமேற்
சில்லிய வர்க்கம் புனைநெல்லை நாதநின் சீரடிக்கே. (௪௭)

உ

அடியார்க் கெளியனெல் வேலியி லன்ன லடியையனா
நொடியா இலுமன வாக்கொத்துப் போற்றி நுகன்றிடுவோர்
மடியாத கீர்த்தி மனோத சித்திநல் வாழ்வுறுஞ்சீ
குடியா யிருப்பள் குபேரனுந் தானங் கொடுமென்பனே (௪௮)

கொடுங்கால தூதர் விடுங்கால பாசங் குவிந்தென் றன்மேற்
படுங்கால மும்உனை நான்மற வேன்பண்டைப் பத்தனைச்சென்
றடுங்கால காலநெல் வேலியத் தாவன் றவனைக்கண்டு
நடுங்காத வண்ண மெனக்கரு ளீகரு ணாகரனே (௪௯)

கரக்கக் கரக்கலன் காதலித் தாயெனுட் கன்றலெல்லாங்
கரக்கக் கரக்கஞ்சங் காட்டியஞ் சேலெனக் காத்தினிக்கிக்
கரக்கக் கரக்கத்து கின்றார் கடையணு காதுநெய்க்கா
கரக்கக் கரக்கத்த னேயெனை யாணெல்லைக் கண்ணுதலே.

(இ-ள்) கரம்-விஷத்தை, கக்கு-கக்குகின்ற, அரக்கலன்-சர்ப்பாபரணத்தை, காதலித்தாய்-விரும்பினவரே, நெய்க்கு-நிணத்துக்கு, ஆகரம்-உறைவிடமாகிய, கம்-பிரமகபாலத்தை, கரம்-கையிற்றரித்திராநின்ற, கத்தனே-கடவுளே, நெல்லைக்கண்ணுதலே-நெல்லைமாநகரத்திலெழுந்தருளியிராநின்ற நெற்றிக்கண்ணையுடையவரே, என்னுட்கன்றலெல்லாம்-அடியேனுடைய மனப்புழுக்கத்தையெல்லாம், கரக்க-ஒளிக்க, கரக்கஞ்சங்காட்டி-தாமரைமலர்போன்றகையைக்காட்டி, அஞ்சேலென-பயப்படாதேயென்றுசொல்லி, காத்து-காப்பாற்றி, இனி-இனிமேல், இக்கரக்கக்கர-இக்கரக்கக்கரவென்று, கத்துகின்றார்-பேசுகின்றவர்களுடைய, கடை-தலைவாயலை, அணுகாது-சேராதபடி, எனையாள்-அடியேனையாண்டருள்வீராக. (எ-று) (௫௰)

கண்கண்ட தெய்வ முனையன்றி வேறெந்தக் காலத்தினு
மண்கண்ட ‘மீதேவ ருங்கண்ட தில்லைநன் மாண்புயரும்
விண்கண் டதுமிலை நெல்லைக்கண் ணாயுனை மேவரிய
பண்கண்ட நான்மறை பேசவு மில்லையிப் பாரிடத்தே. (௫௧)

இடங்கொண் டணைந்திணை கொண்டே யிளகி யிலங்குமுத்து
வடங்கொண்ட கொங்கைமி னாளன்னை காந்தி மதிமகிழ
நடங்கொண்ட நெல்லையி லப்பல வாவுனை நண்ணுதற்குத்
திடங்கொண்ட சிந்தை யெனக்களிப் பாய்முத்தி சித்திக்கவே. (௫௨)

சித்தியுஞ் சித்தி தருந்தெய்வ முஞ்செகத் தேபுரக்குஞ்
சத்தியுஞ் சத்திக் கிருப்பிட முந்தவந் தானுயர்வோர்
முத்தியு முத்திக்கு வித்துமவ் வித்தின் முளைத்தெழுந்த
புத்தியு மாநெல்லை நாதாவென் மேலன்பு பூண்டருளே. (ருங)

பூண்டவன் பாற்றொண்டன் வேணு வனத்திற் புகுந்திறைஞ்சி
வேண்ட வளர்ந்த வனவா தாநெல்லை மேவி மன்றிற்
றாண்டவ மாடிய சங்கர னேயெஞ் சதாசிவனே
ஆண்டவ னேயெனை யீண்டாளென் றுறக்கலி யஞ்சிடுமே. (ருச)

அஞ்சக் கரமெனு மாயுதத் தாலக மாவயலிற்
பஞ்சப் புலன்களை வெட்டியன் பாமுரம் பாங்கமைத்து
விஞ்சத் திருத்திநெல் வேலியின் மேவிய வித்தகனார்
கஞ்சத் திருப்பத நாற்றினை நாட்டிக் கடிதுய்ம்மினே. (ருரு)

மின்போலத் தோன்றி யழியுமிக் காயத்தை வீணின்மபி
யென்போ லலைந்தவ ராருமுண் டோவெளி யேன்றனக்கிங்
குன்போ லுரிமை யுடையவ ரார்நெல்லை யுத்தமனே
பொன்போ லவிர்சடை யாயெனை யாளப் பொறுப்புனக்கே. (ருசு)

பொறுத்தாலு நான்செய்யுங் குற்றங்கள் யாவும் பொறுதெனைநீ
யொறுத்தாலு முன்னும் வாமளித் தாலு முளத்தொருக்கான்
மறுத்தாலு நெல்லையில் வாழ்நிதி யேமன வாய்ப்பறிய
வெறுத்தாலு நான்மற வேனின் கழற்றஞ்சம் வேறில்லையே. (ருஎ)

இல்லை யெனக்கினி யென்றே யொருவ ரிடத்திரந்து
பல்லைத் திறந்திரு நாலுன்குங் காட்டிப் பணிந்தவர்வாய்ச்
சொல்லைச் சுருதி யெனவைத்தி டேலென் றுயர்களைந்து
நெல்லைப் பதிக்கர சேசுக வாழ்வை நிலைநிறுத்தே. (ருஅ)

நிலையாக் கருங்கடல் சூழ்நில மேனிதி நீள்விரும்பி
யலையா தெனைப்பணித் தாளைய னேயன்னை யாய்கயிலை
மலையாய் நெல் வேலியின் மாமணி யேமலர் வாளிகழைச்
சிலையானைக் காய்ந்திட்ட தேவேநின் பாதந் தெரிசிக்கவே. (ருசு)

சிக்கத் தனங்கடி னங்கச்சி விட்டுத் திறக்குநர்நே
சிக்கத் தனங்கடி னங்கொடுத் தேனினித் தேர்ந்து தெரி
சிக்கத் தனங்கடி னஞ்சே சடிக்கஞ்சஞ் செய்நெல்லைநே
சிக்கத் தனங்கடி னஞ்செக தீசசஞ் சேணரனே.

(இ-ள்) சிக்க-கண்டவர்கள்தங்களுடையகாமவலைக்குள்சிக்கும்பொருட்டு, தனங்கள்-கொங்கைகளை, தினம்-நாடோறும், கச்சிவிட்டு-ரவிக்கையாற்பொத்தி, திறக்குநர்-திறந்துகாட்டுகின்றமாதர்கள், நேசிக்க-விரும்பும்படி, தனம்--திரவியத்தை, கடினம்-மிகுதியாய், கொடுத்தேன்-தந்தேன், இனி-இனிமேலாகினும், தேர்ந்து-நல்லறிவுண்டாய், தன்-உன்னுடைய, அம்-அழகிய, கள்தினஞ்சேர்-சந்ததம்மதுநிறைந்த, அடிக்கஞ்சம்-பாததாமரையை, தெரிசிக்க-தெரிசித்துய்யுமாறு, செய்-அனுக்கிரகஞ்செய்தருள்வீராக, நெல்லைநேசி-நெல்லைமாநகரத்தைவிரும்பியவரோ, கத்தன்-கடவுளே, அம்-அழகிய, கடி-வாசனையுடைய, நம்-எங்களுடைய, ஜெகதீச-சர்வபுவனங்களுக்குமீசனே, சஞ்சேணரனே-வெற்றியுடையஉயர்ந்தசிவபெருமானே. (எ-று). (௬௰)

சேணா தவனிங் கிரன்முதற் றேவர் தினமுமுனைப்
பேணா தவருமுண் டோநெல்லை யாயுனைப் பித்தனென்று
கோணா தறைபவர் யாரோ வவர்நின் குளிரடியைக்
காணாத கண்ணனைச் சொல்வர்சேந் தாமரைக் கண்ணனென்றே (௬௧)

கண்டந் தரிக்கும் விடத்தாய்நெல் வேலியிற் கண்ணுதலாய்
பண்டந் தரிக்கு மருங்களித் தாய்நின் பழவடியா
ரொண்டந் தரிக்கு மரிதான வாவினி யேயனைபாற்
பிண்டந் தரிக்கும் படிவைத்தி டேலென் பிழைபொறுத்தே (௬௨)

பிழைவன மாக வடியேன் செயினுநின் பேரருளா
மழைவன மாகப் பொழியிலென் னுமயன் மாலறியா
இழைவனம் வாழர வைப்புனை நெல்லை யினில்வளர்ந்த
கழைவனச் சங்கர வென்றஞ்ச மாநின் கழற்கஞ்சமே (௬௩)

கஞ்சத்தி லேபிறந் தஞ்சத்தி லேருங்கங் கைப்படைப்பிற்
குஞ்சத்தி லேயணி மஞ்சத்தி லேறிடுங் கோதையர்கண்
ணஞ்சத்தி லேவிழு நெஞ்சத்தி லேனிகர் கன்னெல்லையாய்
கிஞ்சத்தி லேயிர பஞ்சத்தி லில்லெனக் கேயிரங்கே. (௬௪)

இப்பவர்க் கென்றுமொன் றீயா தவரைக்கண் டேபதுங்கிக்
காப்பவர்க் காக்கங் கலிப்பது மன்னவர்க் காணவருள்
சுரப்பவர்க் கின்ன றொட்டீர்கின்ற துங்கிளர் தொல்லுலகும்
புரப்பவ ராநெல்லை நாதாவி தென்ன புதுமைசொல்லே. (௬௫)

சொல்லும் பொருளு மெனக்காங் கிமதி துணைத்தனங்கள்
புல்லும் புகழ்த்திரு நெல்வேலி யாய்நின் புதுமலர்த்தா
ளல்லும் பகலுந் தலைக்கணி வோர்க்கிவ் வகிலமெலாஞ்
செல்லும் படிக்குச்செல் வாக்கின்பம் ஞானஞ் செழித்திடுமே. (௬௬)

செழிக்குந் தமிழ்க்கடற் றெள்ளமு தார்ந்தருட் டீம்புனலிற்
குழிக்கும் படிக்கென்று கூடுங்கொ லோவிக் குவலயத்தோர்
விழிக்குங் கருங்கடன் மேற்றுயின் மாலுக்கும் வேதனுக்கு
மொழிக்கு நினைவுக்கு மெட்டாத நெல்லையின் முன்னவனே (௬௭)

முன்னவ னேயென்முன் —சின் றருள்புரி மூவிலைவேன்
மன்னவ னேமுன் மகளீ ரிலக்கண மாண்பதனைச்
சொன்னவ னேதிரு நெல்வேலி வாழுஞ் சுகானந்தனே
சின்னவ னேயென் றெனைக்கை விடேல்தயை செய்குவையே. (௬௮)

செய்யா ரழனின் றிருமேனி யாயினுந் தேனி னினி
யய்யாநின் ஞாரு ளார்காற் பிடிக்கவஞ் சாவெவ்வினையே
பையா பலேயுனை யேனறுகொண் டோம்பத்தர் பாங்கெனவே
ஆய்யாசொன் ஞநெல்லை மெய்யர் கவலை துலையுமின்னே. (௬௯)

இன்னந்தி யங்கி யிராதெளி யேனையின் றேன்றுகொளாய்
இன்னந்தி யங்கி யெழினிறத் தாயெகி னேய்கழனி
இன்னந்தி யங்கி யிசைகாரி தானத்தி லேகுநெல்லை
இன்னந்தி யங்கிடை யாதோ யினித்துய ரில்லையென்றே.

(இ—ள்) ஆயில்நந்தி-மாதாவையில்லாதநந்தியென்னுநாமத்தையுடையவரே, அங்கியெழினிறத்தாய்-அக்கினியைநிகர்த்தஅழகியதிருமேனியையுடையவரே, எகின்எய்கழனியில்-அன்னப்பக்ஷிகணிறைந்தவயல்களில், நந்து இயங்கி-சங்கங்களானதுஊர்ந்து, இசைகாரிதானத்திலேகும்-சாஸ்வதியி

னிருப்பிடமாகியதர்மலாயிலேகும்படியானவளப்பத்தையுடைய,நெல்லையின் -நெல்லைமாநகரத்திலெழுந்தருளியிராநின்ற, அந்தியங்கிடையாதோய்-முடி வில்லாதவரோ, இன்னந்தியங்கியிராது-இனிமேலுந்திகைத்திராதபடி, எளி யேனை-அடியேனை, இனித்துயரில்லையென்று-இனிமேலுனக்கொருநாளுந் துன்பம்வரத்தக்கதில்லையென்றுசொல்லி, இன்றேன்றுகொள்-இப்பொழு தேனுடைக்கலங்கொடுத்துக்காப்பாற்றுவீராக (எ—று) எ-ஈற்றசை. (௭௰)

என்றே யெனக்குன் னருள்புரி வாய்கள் ளிரவிற்சந்து
சென்றே பரவை சினந்தீர்த்த வாபசுஞ் செம்பொனுயர்
மன்றே னடித்த மழுவிடை யாயிம வான்பயந்த
குன்றே மருவிய நேல்வேலி வாழென் குலதெய்வமே, (௭௧)

தெய்வசி காமணி யேமணிக் கூடலிற் சென்றுவிற்ற
மெய்வசி காமணி கண்டாநெல் வேலியில் வித்தகனே
சைவசி காமணி யேயரு ணெஞ்சிற் றமியனையே
செய்வசி காமணி யேயடி யேன்கடைத் தேறிடவே. (௭௨)

தேறுமெஞ் ஞானத் திறலளித் தேயிச் சிறுவனைநா
டோறும் புரந்து துயர்களை வாயரி தூய்விடையி
லேறும் பரம சிவனேநெல் வெலியி லின்னமுதே
ஆறு மதியு மணிசடை யாயென்னை யாதரித்தே. (௭௩)

ஆதார நின்றிருப் பாதார விந்தமல் லாலடியேற்
கேதா ரகமில்லை வேறென் னாளு மியம்பல்பத்துக்
காதாரக் கேட்டு மிரங்கிலை யோகடைக் கண்ணருளக்
கேதார னேதிரு நெல்வேலி வாழுங் கிருபையனே. (௭௪)

கிருபைசெய் வினைப் பற்காட்டிப் புல்லனைக் கெஞ்சிடினு
மொருபைசென் றாலுங் கொடார்நெஞ்சே மேயிஃ தூண்மையினித்
திருபை யாரவணி நெல்வேலி வாழ்சிவ சிந்தனை செய்
திருபையப் பையப் பழுத்திடு மேயரு ளின்கனியே. (௭௫)

கனியே கனியின் கனிரச மேநற் கருணைநிறை
தனியே தனிகர்க் கிருநிதி யேயென் றனதுதுயர்ப்
பனியே பனிக்கும் படியருள் வாயருட் பாங்குகொண்டே
நனியே நளினப் புனல்சூழ்நெல் வேலிநந் தாமணியே. (௭௬)

நந்தா மணிவிளக் கேயருள் ஞான நதிபதியே
சிந்தா மணியெனுந் தேவேநெல் வேலி திகழுமுக்க
ணிந்தா மணிசடை யாயெளி யேனுக் கிரங்கிவே
கந்தா மணிமிடற் றுயெம னூர்வருங் காலத்துமே. (எஎ)

காலங் கலியுக மென்பதற் கோநின் கருணைகனி
சீலங்கண் டையந் தெளிந்தேனென் சிந்தை செழிக்கவநு
கூலங்கள் செய்தெளி யேன்குடி யாவுங்கொள் கொத்தடிமை
பாலங்கண் ணாய்திரு நெல்வேலி மேவிய பண்ணவனே. (எஅ)

பண்ணுமென் பூஜையும் பத்தியு முன்றன் பதாம்புயத்தை
நண்ணுதற் கேற்ற நலமுள தோநினை நாடிடும்போ
தெண்ணுமென் சிந்தை பலகோடி யேசற் றிரக்கம்வைத்துக்
கண்ணுத லேநெல்லை யாயெனை யாணின் கருணைதந்தே (எகூ)

தந்தனத் தாரந் தரிக்குந ரிச்சை தனைநசைநித்
தந்தனத் தாசை தணித்தாண் டெனக்கருள் சந்ததஞ்சூல்
தந்நத் தார்செய் தனிற்சாலி நேர்நெல்லை சார்ந்ததனித்
தந்தனத் தாஜக தீசா கருணைச் சசிதரனே.

(இ—ள்) தந்தனத்து-தங்களுடையதனத்தில், ஆரம்-முத்தாரங்களை தரிக்குநர்-தரித்துக்கொள்ளுமாதர்களுடைய, இச்சை-விருப்பத்தை (அதாவது பெண்ணாசையையும்), தனைநசை-மண்ணாசையையும், தனத்தாசை-பொன்னாசையையும், நித்தம்-எக்காலத்தும், தணித்தாண்டெனக்கருள்-தீர்த்து அடியேனையாண்டருள்வீராக, சந்ததம்-சதாகாலமும், சூல்தந்த-சூலுள்ள, நந்தார்-நத்துக்கணிறைந்த, செய்தனில்-வயல்களில், சாலிநேர்-நெல்நிறைந்த வளமுடைய, நெல்லை-நெல்லைமாநகரத்தில், சார்ந்த-எழுந்தருளியிராநின்ற, தனித்தந்தன் அத்தா-ஒற்றைக்கொம்பையுடையவிநாயகக்கடவுளின்பிதாவே, ஜகதீசா-சர்வபுவனங்களுக்குமீசனே, கருணைச்சசிதரனே-கருணைநிறைந்த சிவபெருமானே. (எ—று). (அ௰)

தரமன்று நீயெனத் தள்ளிவி டேலெனைத் தான்றருவர்
புரமன்று காய்ந்த பொருப்புவில் லாய்மண் பொதுத்தந்தையின்
சிரமன்று செற்ற சிவக்கொழுந் தேஜெக தீசசம்போ
பரமென் றுனையடைந் தேனெல்லை யாயிந்தப் பாரினிலே. (அக)

பார்க்குந் திசைதொறு நெல்லையப் பாநின் பனிச்சிறைவண்
டார்க்குங் கமல முகமுமைக் கண்டமு மம்புயமும்
வார்க்குங் குமமுலை யாளுறை பாகமும் வல்வினைக
டீர்க்கும் பதாம்புய முங்கண்மு னேவந்து தென்படுமே. (௮௨)

தென்பான் முகங்கொண்ட தேவேசெந் தேனிற் சிறந்தபசு
வின்பால் கலந்த விளாக்கனி யேயருண் மேவியவுன்
னன்பான் மகிழ்ந்தென் மதலா யபயமஞ் சேவினியென்
றென்பா லொருமுறை யேனுஞ்சொல் வாய்நெல்லைக் கின்னிறையே.

இறையவ னேயிம வான்மரு காவெழி லேய்மிடற்றிற்
கறையவ னேகங்கை வாழ்சடைக் காட்டிற் கலந்திலங்கும்
பிறையவ னேயின்ன மும்பிற வாவருட் பெற்றியெற்கீ
மறையவ னேதிரு நெல்வேலி மான்மழு வார்கையனே. (௮௪)

கைக்கும்பி டன்றிக் கருத்தொன்றி லேனையுங் கைவிட்டிடா
தைக்கும் படிக்குள் ளுவந்துல வாவரு ளோங்கிடவிம்
மைக்கும் மறுமைக்கு மேற்பசல் வாழ்வருள் வானவரு
மெய்க்கும் புகழ்த்திரு நெல்வேலி மேவிய மேலவனே. (௮௫)

மேலான தெய்வமொன் றுண்டென்ப சத்தை விளக்கிடற்க
பாலா வுனையன்றி வேறுள தோயென்றும் பத்தாறு
கூலாநெல் வேலியிற் குன்றவில் லாய்கொடுங் கூற்றுதைத்த
காலா நினைத்தொழு வோர்க்குமுண் டோகருக் கம்பலையே. (௮௬)

கருவர்க்க நீக்குங் கருணைவெற் பேயென் கவலைமற்று
மொருவர்க்கு மேயுரா யேனுனைத் தென்பய னுன்னையன்றி
யிருவர்க் கறியப் படாதெழுந் தோங்கிய வின்னமுதே
மருவர்க்கஞ் சூடிய தேவேநெல் வேலிக்கு வாய்த்தமன்னே. (௮௭)

மன்னே வளமிகு மாமணி யேயான் மாலறியா
வன்னேநெல் வேலிக் கரசேமுக் கண்ணுடை யாயடியேன்
கொன்னே கழித்தனன் வாணாளந் தோவக் குறைபொறுத்தே
யின்னே வலியத் தடுத்தாட்கொண் டேழையை யேன்றுகொளே. ()

கொள்ளத் தனத்தைக் கொடுக்கின்ற மாதர் குடிலமதைத்
தள்ளத்த னெல்லையிற் றாணுவின் சன்னிதி சார்ந்துநெஞ்சே
யெள்ளத் தனையென் கினுமன்பு பூண்டவற் கேயுனது
கள்ளத் தனத்தைவிட் டேயுனைப் பாயென்றன் காதலையே. (௮௯)

காதலை யானின் கழற்காக்கி னேனெந்தக் காலத்திலுங்
காதலை யானின் கருணைக் கிணையிருக் காதெனது
காதலை யானின் றிரைகின்ற தைக்குணங் கண்டருணீங்
காதலை யானின் றிசைந்தேத்து நெல்லையிற் கங்கரனே.

(இ-ள்) நீங்காது-இடைவிடாமல், அலையான்-திருப்பாற்கடலிலறிதுயிலமர்கின்றவிஷ்ணுவானவர், நின்றிசைந்தேத்தும்-மனமிசைந்துநின்றுதொழும்படியான, நெல்லையிற்கங்கரனே-நெல்லைமாநகரத்திலெழுந்தருளியிராநின்றபிரமகபாலத்தைக்கையிலேந்தியசிவபெருமானே, காதலை-விருப்பத்தை, யான்-அடியேன், நின்கழற்காக்கினேன்-உன்பாதாரவிந்தத்தில்வைத்தேன், எந்தக்காலத்திலும்-எக்காலத்திலும், காதல்-கொல்லாதேயும், ஐயா-பிதாவே, எனது-அடியேனுடைய, காது-செவியானது, அலையாநின்றிரைகின்றதை-அலைபோலிரைச்சலிடுவதை, குணங்கண்டருள்-குணப்படுத்தியநுக்கிரகஞ்செய்வீராக, நின்-அப்படியானாலும்முடைய, கருணைக்கு-கிருபைக்கு, இணையிருக்காது-ஒப்புவமையிருக்கமாட்டாது. (எ-று) (௯௰)

கரமே குவித்துள் கரைந்தே கனிந்துகண் கார்கசிந்து
சிரமே லுயர்த்தியென் சிந்தையெர் நோந் திரும்பியுன்பாற்
பரமே திருநெல்லை நாதாவென் றேநின் பதம்பணிநல்
வரமே யளித்திட வேண்டுமய் யாவபி மானம்வைத்தே (௯௧)

மானெழுந் தாடுங் கரத்தோயிவ் வேழையை வாட்டுமுள்ளிற்
றானெழுந் தோங்குந் தளர்வையெல் லாநெல்லைச் சங்கரதீர்ப்
பானெழுந் தேநின்றன் பாலுனைப் பேன்பிறர் பாலுனைக்க
கானெழுந் தானுமென் னுவெழு மோர்மொழி நல்கிடவே (௯௨)

கல்விக் கெனுமொழி யாடிரு நெல்லை நகைமதியைப்
புல்லிப் புவனம் புரக்குமன் றேயென் புழுக்கமெலாஞ்
சொல்லித் தெரியவும் வேண்டுவ தோபத்தி சோதனையோ
கல்விக்குப் பிள்ளை யுனைத்தா வமுதந் தருகின்றதே (௯௩)

தருத்தொறு பூம்பொழில் சூழ்நெல்லை நாதநின் றன்னடியேன்
செருத்தொழில் வேல்விழி மாதர்கள் சிற்றின்பத் தீங்கறப்பா
மருத்தொடை சூட்டிநின் பாதாம் புயத்தை வணங்கச்சற்றே
கருத்தொரு மிக்கையி லந்தோ கவலை கலைக்கின்றதே. (௬௪)

கலையறி யாத கடையேன் குடும்பக் கவற்கடலிற்
றலையறி யாது விழுந்தேனச் சோவரு டான்றருவா
யலையறி யாத வருட்கட லேநெல்லை யாமுதே
விலையறி யாமணி யேபுரை நீங்கிய வேய்முத்தனே. (௬௫)

வேய்க்குங் கதிதா வேயுதித் தோயருண் மேவுமுமைத்
தாய்க்கு மருங்களித் தோய்நெல்லை யாய்நின் சரணமிந்த
நாய்க்குங் கிடைக்கு மெனவொரு சோதிடர் நல்கிலவர்
வாய்க்கும் பழம்பஞ்ச தாரையிற் சேர்த்து வழங்குவனே. (௬௬)

வழங்குங் கருணைநல் வாரியென் றேயரு மாமறைகண்
முழங்குநெல் வேலியின் முன்னவ நீவந்து முன்னிலையேற்
பழங்குகை சென்று பனிவெயிற் காய்ந்து பசிக்குச்சற்றே
கிழங்குஞ் சருகும் புசிப்பதி லோகிட்டுங் கேவலமே. (௬௭)

வலங்கவிழ் தும்பை மலரணி வேணிய வாரிதியிற்
கலங்கவிழ்ந் தார்மனம் போலே கலங்குங் கடையனுஞ்சஞ்
சலங்கவிழ்ந் துன்னைச் சரண்புகுந் தாயிழை தங்கண்மயல்
விலங்கவிழ்ந் துய்வதற் கென்செய்கு வேனெல்லை வேதியனே (௬௮)

வேதிய னேவெள்ளி வெற்பின னேவெள் விடையமர்ந்த
சோதிய னேயுயர் தூயவ னேசுகந் தோயுமுமை
பாதிய னேநெல்லைப் பண்ணவ னேபந்த பாசமிலா
நீதிய னேயென் றனையே கருதுமென் னீள்சிந்தையே. (௬௯)

சிந்தனை யாகத் தனையேத்தி னேனினிச் சீரகங்க
சிந்தனை யாகத் தடங்கட னீரினிற் சேக்கைகொண்ட
சிந்தனை யாகத் தடைந்தா யெனக்கருள் செய்தயையிற்
சிந்தனை யாகத்த னேநெல்லை நாதநற் சீர்தங்கியே.

(இ-ள்) தடங்கடனீரினில்-விசாலம்பொருந்தியதிருப்பாற்கடலில்,

சேக்கைகொண்ட-அறிதுயிலமர்ந்த, சிந்தனை-மகாவிஷ்ணுவை, ஆகத்தடைந்தாய்-தேகத்தினோர்பாகத்திலடைந்தவனே, தயையிற்சிந்தனையா-கிருபையிற்சமுத்திரம்போன்றவனே, கத்தனே-கடவுளே, நெல்லைநாத-நெல்லைமாநகரத்திலெழுந்தருளியிராநின்றசிவபெருமானே, சிந்தனையாக-(அடியேன்) மனதுடனே, தனை-உன்னை, எத்தினேன்-தொழுதேன், இனி-இனிமேலாவது, சிரகங்கசிந்து-சிறப்புற்றஉன்மனமிரங்கி, அனையாக-தாய்போல், நற்சீர்தங்கி-நல்லசிறப்புத்தங்கும்படியாக, எனக்கருள்செய்-அடியேனுக்குக்கிருபைசெய்வாயாக. (எ—று) எ—ஈற்றசை. (௱)

(முற்றிற்று.)



சிவமயம்.

# சாத்துகவி.

பொன்னைமாநகரம் கவிராஜ அழகியநம்பியாபிள்ளையவர்கள் குமாரர்
ஆரியங்காவுப்பிள்ளையவர்கள்
இயற்றியவை.

அறுசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்.

பூமணங்குமாலையெனினுசிமட்டேமணக்குமதுபோதாதென்றே
காமணங்கச்செவிமணக்கவல்லோர்களுளமணக்கவிந்துவாடாப்
பாமணங்குமாலைசெய்துசிவகாமசவுந்தரியாம்பனைபாதத்திற் [னே.
றேமணங்குந் தையல்பாகக்குரிசில் புனைந்துயர்ந்தான் றெளியத்தா

நீதிநூலுணர்ந்தாசர்சபைநடுவிலெடுத்துரைக்குநியமம்பூண்டு
மாதியான்வேணுவனவாலயத்தின்றருமகர்த்தாவாயுஞ்சைவ
பூதிசாதனம்விளங்கச்சிவகாமசவுந்தரியைப்போற்றிமுன்செய்
மாதவத்தோன்தையல்பாகக்குரிசிலிந்நூலும்வகுத்திட்டானே.

ஓட்டப்பிடாரத்தாலூகாக் கடம்பூருக்கடுத்த ஓமாக்குளத்
திலிருக்கும் வித்வான் ஷை யூர் கிராமமுன்சிபு
கைலாசநாதபிள்ளையவர்கள்
இயற்றியவை.

அறுசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்.

மாக்கொண்டுவளர்புதுவைச்சிவகாமசவுந்தரிபொன்மலர்த்தாள்மீது
பூக்கொண்டுதொடுத்தலங்கல்சாற்றிடில் வாடுறும்பசிய பொன்னுற்
செய்து, மீக்கொண்டு சாற்றிடிற்றேய வுறுமுத்தம்வெண்மை யெ
னும் விதந்தேர்ந்தாய்ந்து, பாக்கொண்டுதொடுத்தணிந்தான்தையல்
பாகத்தமிழ் மெய்ப்பாவலோனே.

செல்லாரும்பொழில்வளஞ்சூழ்சாலிவாடீசர்திருவருளாற்பூவில்
வல்லாரும்வியப்புறப்பிளீடருத்தியோகமுறைவழாதுசெய்வோன்
சல்லாபன்றருமகர்த்தா தையல்பாகச்சுகுணன்தாணிமாக்க [னே.
சொல்லாருஞ் செவிக்கமுத மெனப்பருகவிந்நூலை யிசைத்தான்மன்

வாசுதேவநல்லூர் வித்வான்
பழனியாண்டிப்புலவரவர்கள்
இயற்றியது.

அறுசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்.

செய்யவளஞ்சேர்புதுவைத்தெய்வவயித்தியருரிமைச்சிவகாமித்தாய், துய்யமலர்ப்பதத்துணைக்குச்சொல்லுயர்பாமாலை சொலிச்சுமுகமாக, வைபமதிலுண்மையுடன்மாலையுடன்வனைந்தனனன் மதியோர்வாழ்த்தத், தையல்பாகத்தகுதியோனெனவேமிக்கபுகழ் தழைத்துள்ளானே.

ஷை யூர் திருமலையாண்டிக்கவிராயர்
இயற்றியது.

அறுசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம். [ஞானக்.

கருப்புவனக் குழன்மடவார்காசினி பொன்னிவை யெல்லாங்கடந்து
திருப்புவனமனத்தூயோர்க்கருள்புதுவைச்சிவகாமிச்சிரம்மைக்கே
பொருப்புவனசம்புயமாமுகத்தையல்பாகவேள்புகழ்ப்பாமாலை
மருப்புவனத்தார்மகிழப்பத்தியொடுசூட்டிநல்லவரம்பெற்றுனே.

திருநெல்வேலியிலிருக்குந் தட்டப்பாறை வித்வான்
உமைபொருபாகம்பிள்ளையவர்கள்
இயற்றியது.

அறுசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்.

யாமாலை நீங்கவருள் சிவகாமசவுந்தரியென்னம்மைமீதிற்
பூமாலை வாடுறு நன்மணிமாலை பொளளலுறும் பொன்னுற்செய்த
மாமாலைதேய்வுறு முத்தாமாலை வெள்ளையென மதித்துநாளாற்
பாமாலை புனைந்தருள் பெற்றுன் தையல்பாகமகிபாலன்மாதோ.

உ

சிவமயம்

# *புதுவைச்சிவகாமசவுந்தரிமாலை.

காப்பு.

கட்டளைக்கலித்துறை

பொன்கொண்ட மேன்மைப் புதுவாபுரியி னெப்போதும்வளர்
மன்கொண்ட தெய்வ வயித்திய லிங்கர் மகிழ்ச்சிமிகத்
தென்கொண்ட மெய்ச்சிவ காமிக் கிலம்பகஞ் செப்புதற்கு
மின்கொண்ட துங்கச் சிவகங்கை யைங்கரன் மேற்றுணையே.

நூல்.

கட்டளைக்கலித்துறை.

பிறைகொண்ட வேணிப் பிரான்புது வைப்பதி பெற்றபதி
கறைகொண்ட கண்ட னெனும் வயித் தீசர்க்குக் காதன்மிக
நிறைகொண்ட கற்பு நெறிகொண்ட தேவிநின் னேயம்வைத்துத்
தறைகொண்ட தொண்டர்க் கருள்சிவ காம சவுந்தரியே. (க)

நீர்கொண்ட வாவி புடைசூழ் கழனி நிறைந்திலங்கு
மேர்கொண்ட தென்புது வைக்கா சேயெளி யேற்கருள்வாய்
வார்கொண்ட பூண்முலை மாணிக்க மேமரு வார்ந்தகொன்றைத்
தார்கொண் டவன்பங்கில் வாழ்சிவ காம சவுந்தரியே. (உ)

அண்டர்கள் போற்றுநின் பாதார விந்தத்தி லன்புவைத்துத் [செய்து
தொண்டர்கள் போற்றுங் குழாத்தெளி யேன்சென்று தொண்டு
கொண்டடி யார்க்கடி யேனுகுந் தன்மை கொடுத்தருள்வாய்
தண்டலை சூழ்புது வைச்சிவ காம சவுந்தரியே. (ந)

*'புதுவை'=ஸ்ரீவில்லிபுத்தூருக்குத்தென்பக்கத்திலிருக்கும்மடவார்விளாகம்

எனக்கோர் சுதந்தர முண்டெனின் யாலென் னெனினடியார்
மனக்கோ தகற்று மடக்கொடி யேமறை வாழ்த்துகின்ற
நினக்கே யடிமை புகவினி யாள்வதுன் னீள்கருணை
தனக்கே பரம்புது வைச்சிவ காம சவுந்தரியே. (ரு)

பாசாம ணியிருந் தாலடி யேற்கிந்தப் பார்தனிலே
யாசா தாஞ்செய்து விடருள் வாசறை யாயுனக்கு
நேரான தெய்வமற் றுண்டுகொ லோநறை நேர்ந்தகொன்றைத்
தாராய புதுவை வளர்சிவ காம சவுந்தரியே (௬)

சிற்பா மேசுக மேயருள் ஞானச் செழுஞ்சுடரே
கற்பக மேகனி யேயடி யேனைத்தற் காக்கநின்றன்
பொற்பத மேகதி நாயேற்கு வேறு புகலுமுண்டோ
தற்பா மேபுது வைச்சிவ காம சவுந்தரியே. (௭)

தேனே செறிகொன்றைச் செஞ்சடை யார்பங்கைச் சேர்ந்திலங்கு
மானே புதுவையின் மாணிக்க மேயுன் மலரடிக்கா
ளானே னினியெனக் காதார னின்ற னடிக்கமலந்
தானே தயைபுரி வாய்சிவ காம சவுந்தரியே. (எ)

வஞ்ச மனத்துடை மானர் கல்வி மயக்கத்திலென்
னெஞ்சமென் நாட்பற்று நீங்கவைப் பாயெந்த நேரமுமுன்
கஞ்ச மலர்ப்பத மேயடி யேற்குக் கருணைசெயத்
தஞ்ச மலாதிலை யாள்சிவ காம சவுந்தரியே. (அ)

முத்தியு நீமுது நூல்பல தேறிய மூதறிஞர்
சித்தியு நீயன்றி வேறில்லை யென்னுந் திறமறியப்
புத்தியு நீயுன் பழவடி யாரைப் புரக்கவல்ல
சத்தியு நீயெனை யாள்சிவ காம சவுந்தரியே. (கூ)

நினைக்கு மருந்தவ ரோர்ந்தறி யாநெஞ்ச நீபுரிவஞ்
சனைக்கு மருந்தென்கொ லோவெனக் கிந்த சகாயமிதோ
வினைக்கு மரும்பிணி மூப்புக்கு முற்பவ வீதற்கும்வே
தனைக்கு மருந்துகண் டாய்சிவ காம சவுந்தரியே. (௰)

காகங்க ளாயிரங் கூடினு மென்னொரு கன்முன்னிற்கு
மோகன்ம மாயிரங் கோடியுற் றாலுநின் மோனவருட்
பாகங்கண் டானிற்கப் பாங்குள தோநின் பதம்பணியுற்
சாகங் கொடுத்தருள் வாய்சிவ காம சவுந்தரியே. (௰௧)

ஆயுங் கலையுஞ் சுருதியுங் காண்டற் கரியநின்காற்
றோயும் படிக்குத் துணைச்செய்கு வாய்நற் சுமுகமுடன்
சேயுமடிமையு மாமென்றன் றீவினை தீர்த்திடநீ
தாயுங் கதியுமன் றோசிவ காம சவுந்தரியே. (௰௨)

எல்லா முனது செயலா யினும்யா னெனதெனுமோர்
பொல்லா மயக்கத்தி லேன்புகுத் தாயுன்றன் பொற்பதமே
யல்லாற் புகலிடம் வேறுமுண் டோவடி யாற்கருள்வாய்
சல்லாப மால்விடை யாய்சிவ காம சவுந்தரியே. (௰௩)

அந்தி மதிச்செஞ் சடையார் புதுவையி லண்ணல்பங்கு
வந்திருக் கும்பசு மானந்தி யேயுன் மலர்ப்பதமென்
புந்தியி லன்புற வேதங்கி யேமயல் போக்கிடவே
சந்தி யிதுதகு மேசிவ காம சவுந்தரியே. (௰௪)

நிலத்தே பிறப்பு மிறப்புமம் மாநின்றன் நீள்கருணைப்
பெலத்தே பிடித்தவர் நீப்பால் லான்மற்றப் பேர்கடங்கள்
நலத்தேகைக் கொண்டுய்ய வல்லவ ரோநல நண்புதுவைத்
தலத்தே விருப்புற் றமர்சிவ காம சவுந்தரியே. (௰௫)

அடையார் பாகதி தேவேநின் பொன்னடிக் கன்புசற் றும்
படையா னெனினடி யேனுய்யப் பத்தி பணித்தருண்மால்
விடையா ரரவப் பணியுடை யார்பிறை வெண்மதிச்செஞ்
சடையார் மருங்கில் வளர்சிவ காம சவுந்தரியே. (௰௬)

மாயா நலமருள் வாழ்வே புதுவைக்கு மாமருந்தே
ஓயாத் துன்பத் துலைவேற் கடியர்க் குதவுதல்போ
லீயா விடினுமோ ரொள்ளள வேனு மிரக்கம்வைத்துத்
தாயா யருள்புரி வாய்சிவ காம சவுந்தரியே. (௰௭)

வேதத்தி லேசொல் விதிப்படி யேதுஞ்செய் விக்கமன
மாதத்தி லோர்தினை மேனும்வை யேனிந்த வையகச்சம்
வாதத்தி லேமுழு வாணாளைப் போக்கிய வற்கருட்பா
சாதத்தி லேசற்று மீசிவ காம சவுந்தரியே. (௰அ)

நினையு நினைவுக்கெட் டாதவ ளேயன்பர் நேமமதாய்ப்
புனையுங் கவிக்கிரங் கும்பரி பூரணப் போதத்தமே
மனைபுகல் வாழ்வுமவ் வாழ்வுக்கு வேண்டும் வளமளித்தென்
றனையு மடிமைகொள் வாய்சிவ காம சவுந்தரியே. (௰கூ)

சிவநேய முற்றமெய்த் தொண்டர்க்குத் தொண்டுசெயச்சிந்தையும்
பவநேய நீக்கலுஞ் சுத்தசன் மார்க்கமும் பத்தியுட
னவநேய மாய்ப்பசித் தேவரு வோர்க்குண்டி நல்கவுநற்
றவநேய முந்தந் தருள்சிவ காம சவுந்தரியே. (உ௰)

பாமே பாகதிக் காதார மேயுண்மைப் பத்தர்பெறும்
வரமேயெக் காலு நிலைவர மேமட மாமயிலே
காமே குவித்துனைப் போற்றுவ ருள்ளங் கனிந்துறுசுந்
தாமே யருள்புரி வாய்சிவ காம சவுந்தரியே. (உக)

பொன்போ லிலங்கும் புரிசடை யாரிந்தப் பூதலத்தி
லென்போலு மேழைக் கிரங்குவ ராகம்விட் டேபிறங்கா
மின்போல் விளங்கு மிடையுடை யாயென் வினைதவிர்த்தா
டன்போ னிகரின்றி வாழ்சிவ காம சவுந்தரியே. (உஉ)

நீயே யெனது பிழைபொறுக் காவிடி னின்னடிமை
நாயேன் செயுஞ்செய லென்செய லோவிந்த ஞாலமதிற்
சேயே பிழைசெயிற் றீராத கோபஞ் செலுத்தலுண்டோ
தாயே புதுவை வளர்சிவ காம சவுந்தரியே. (உங)

படையன்ன நீள்விழி மானே யினிய பசுங்கிளியே
விடைமன்னும் வேத வயித்திய நாதர் வியக்குமிள
நடையன்ன மேயிந்த நாயடி யேற்கரு ணல்கிடவே
தடையென்ன சொல்புது வைச்சிவ காம சவுந்தரியே. (உச)

போற்றேனின் பொன்னடிக் கன்புசெய் வாரைப் பொருந்துபசி
யாற்றே னெனதா சேயமு தேயில் வவனிநடைச்
சேற்றே தியங்கிநற் செந்தமிழ் மாலைநின் சேவடிக்குச்
சாற்றே னெனினுஞ் சகிசிவ காம சவுந்தரியே. (உரு)

பிறவிப் பெருங்கட னீந்தற்குத் தோணிவன் பேதமைவித்
தறவிற்ப னச்சுடர் தீவினைக் கோர்மருந் தன்பர்முத்தி
யுறவிச்சை மந்திர நீயடியேன் மனத்துற்றவிடைஞ்
சறவிர்த் தருள்புரி வாய்சிவ காம சவுந்தரியே. (உசா)

நிதியே யருட்சந் நிதியே நிலவா நேர்புதுவைப்
பதியே யமைந்த பரஞ்சுட ரேயெப் பழுதுமிலா
மதியே மரகதக் குன்றே கதிர்மிகு மாணிக்கமே
ததியே யருளரு ளச்சிவ காம சவுந்தரியே. (உஎ)

வண்டார்கொன் றைச்சடை யார்முன் கடனின்று வந்தவிட
முண்டார் புதுவை வயித்திய நாத ருளமகிழுஞ்
செண்டார் குவிமுலை யாயெளி யேற்குன் றிருவருள்செய்
தண்டா மரைப்பதத் தாய்சிவ காம சவுந்தரியே. (உஅ)

சுரும்பேய் மலர்க்குழற் சுந்தரி யேநற் சுகந்தமல
ரரும்பேயென் னுருயி ரேயடி யேனைநின் னாட்கொண்டருள்
கரும்பே கசடறு தேனேகற் கண்டே கனிந்துமுத்தி
தரும்பேரின் பப்பொரு ளேசிவ காம சவுந்தரியே. (உகூ)

இருக்காதி வேதங்க ளீற்றினிற் பாயிந் திரன்முதலும்
பருக்காதி யாய்நின் றருள்புரி வாய்நிற் பணிந்தெழுப
வருக்கா தரவுசெய் வாயடி யேற்குன் மனமிரங்கித்
தருக்கா தரவுசெய் வாய்சிவ காம சவுந்தரியே. (௩0)

கனியுஞ் சருகுங் கருக்காயு மேகனற் கவ்வைக்குண்டு
பனியு மழையும் வெயிலுநின் றேபந்த பாசமதை
முனியு மருந்தவ மாமுனி வோர்க்கு முடிவின்முத்தி
தனியுன் பதாம்புய மேசிவ காம சவுந்தரியே. (௩க)

அருவே யருவுரு வேயகி லாண்டமெ லாமடங்குங்
கருவே கறைக்கண்டன் மாதே யடியர் களுக்குகந்த
குருவே குருமணி யேபுது வாபுரிக் கோவில்வளர்
தருவே யருள்புரி வாய்சிவ காம சவுந்தரியே. (௧௨)

நேத்திர மூன்றுடை யான்பங்கில் வாழ்கின்ற நின்மலமே
சாத்திரஞ் சொன்ன படியேதுஞ் செய்யத் தவம்புரியேற்
காத்திர மட்டுமுண் டென்செய்கு வேனெற் கரோகதிட
காத்திரந் தந்தருள் வாய்சிவ காம சவுந்தரியே. (௧௩)

மின்னை யனையபொய் வாழ்க்கையை மெய்யென்று வீணிலலைந்
ன்னை யறியு மறிவறி யேனினி யுய்யும்வண்ணம்
ன்னையவ் வண்ண மெனக்குணர நல்கியின் னேயெளியேன்
றன்னை யடிமைகொள் வாய்சிவ காம சவுந்தரியே. (௧௪)

கற்றும் பிறர்க்குரைத் தும்பல கேட்டுங் கலைவக்கவிபோற்
சுற்றுந் தொழிலகற் றுங்கெஞ்ச மேகமைச் சூழ்ந்தவினை
முற்றுந் துடைத்தெமை யாள்வதற் கேவந்து முன்னிற்கவே
சற்றுந் தடையிலை யேசிவ காம சவுந்தரியே. (௧௫)

வாராய் திரிபுரா யானந்தி யேமனம் வைத்திரங்கிப்
பாராய் கடைக்க ணடியேன் கவிமுற்றும் பற்றறவே
சோராய் நின் பொற்பத காயடி யேனைத் திருநறும்பூந்
தாராய் புதுவை வளர்சிவ காம சவுந்தரியே. (௧௬)

எங்கும் வியாபித் திருப்பினு மன்ப ரிதயத்துளே
பொங்குங் கருணை பொழிகட லேவினை போக்கியருள்
தெங்குங் கமுகுஞ் சிறப்புள யாவுந் திகழ்புதுவை
தங்கும் பரம்பொரு ளேசிவ காம சவுந்தரியே. (௧௭)

தூங்கிசை பாடுஞ் சுரும்பமர் சோலைகள் சூழ்பெருமை
யோங்கிய தென்புது வைப்பதி மேவிய வொப்புயர்வு
நீங்கிய நின்மல மேயெளி யேனிடர் நீக்கியின்னே
தாங்கி யடிமைகொள் வாய்சிவ காம சவுந்தரியே. (௧௮)

நீடும் புகழ்புது வைப்பதி மேவு நினைத்துதித்துப்
பாடுந் தமிழ்க்கருள் பாலிக்க வேண்டும் பரிவுடனே
வாடுந் தமியனை யஞ்சலென் றேன்றென் மனத்திருளைச்
சாடுந் தயைபுரி வாய்சிவ காம சவுந்தரியே. (௩௯)

நினக்கே யபயமென் றேலமிட் டேனிந் நீயெளியேன்
மனக்கேத மாற்ற வகைபுரிந் தேயுன்றன் மாணடியா
ரினக்கேண்மை யும்மிக வேயளித் தேயெளி யேன்றனிடர்
தனக்கே விடைகொடுத் தாள்சிவ காம சவுந்தரியே. (௪௰)

அழைக்கும் பொழுதினி லோடிவந் தாணல் லருட்கடலே
மழைக்குந் தளமட வார்தருங் காதல் வலைத்தலைப்பட்
டுழைக்கு மெளியனைக் காப்பதென் றேவுனை யொண்புதுவை
தழைக்கும் பரா சத்தி யேசிவ காம சவுந்தரியே. (௪௧)

இனிக்குஞ் செழுந்தமி ழீரே ழுலகு மிசையெழும்பித்
தொனிக்கும் படியுனை நான்கவி மாலை தொடவதற்காய்ப்
பணிக்குங் குளிர்கடைக் கண்ணருள் பாலியன் பாய்ப்புதுவைத்
தனிக்குந் தளமயி லேசிவ காம சவுந்தரியே. (௪௨)

நந்தா மணிவிளக் கேதனி யேயிந்த நாயடியேன்
சிந்தா குலந்தனைத் தீருமை யேசித்தத் தேயிரங்கி
யந்தா மரையி னனங்களுஞ் சாலியு மார்பணைசூழ்
சந்தானஞ் சேர்புது வைச்சிவ காம சவுந்தரியே. (௪௩)

முன்னம் பிறந்த பிறப்போ கணக்கின் முடிவதில்லை
யின்னம் பிறக்க விடைவைத் திடாதரு ளிப்பிறப்பே
யுன்னம் பதங்கண்டு நாயடி யேன்கடி தாய்யவருள்
தன்னைத் தனிப்புது வைச்சிவ காம சவுந்தரியே. (௪௪)

நாயினுந் தீய கொடியனுன் னாமத்தை நண்ணுதற்கு
வாயினும் புன்மனத் தானுமுண் டோவுய் வகையருள்வாய்
தீயினுந் தீய புரமெரித் தான்பங்கு சேர்புதுவைத்
தாயினு நற்றுணை யேசிவ காம சவுந்தரியே. (௪௫)

பொன்னைப் பழிக்கு முருவுடை யாயுனைப் போற்றிலனே
லென்னைப் பழிப்பவ ராெளி யேன்பிழை யேபொறுப்பாய்
மின்னைப் பழிக்கு மிடையா யெனக்கை விடின்மிகவுன்
றன்னைப் பழிப்பான் றேசிவ காம சவுந்தரியே. (௪௬)

இனியே தெமக்குன் னருள்வரு மோவென வேங்கிமனம்
நனிநொந்து வாடுதந் தோவெனைச் சூழ்பவம் ஞாயிறுமுன்
பனிசெல்லு மாறு பணித்திடு வாயருட் பாங்குகொண்டே
தனிபங்க யப்பதத் தாய்சிவ காம சவுந்தரியே. (௪௭)

உனக்கடி யேனடித் தொண்டாகி யுன்னடிக் குண்மையுற
எனக்கினித் தோன்றியஞ் சேலெனு நாளெது வேயெளியேன்
மனக்குறை தீர்க்கு மளிக்கட லேயிம வான்மகளே
தனக்கொரு நேரின்றி வாழ்சிவ காம சவுந்தரியே. (௪௮)

எண்ணாத வெண்ணி யுருகுநெஞ் சேயெளி தேயுனக்கு
நண்ணாத தொன்றிலை யெல்லா நலமு நமக்களிக்கக்
கண்ணான தெய்வமுண் டேபுது வாபுரிக் கண்ணமர்ந்த
தண்ணார் கருணைக் கடல்சிவ காம சவுந்தரியே. (௪௯)

தூய கயற்கண் மடக்கொடி யேசுகந் தோய்ந்திலங்குஞ்
சேய பவளப் பெருங்கிரி யேதெளி தேனமுதே
மாய மகற்று மருந்துநின் மாணடி மாட்சியின்றித்
தாயகம் வேறு முண்டோசிவ காம சவுந்தரியே. (௫௰)

அவியா விளக்கையென் னாரமுதை யருட்கடலைப்
புவியார் புகழ்புது வைப்பதி மேவிய புண்ணியத்தைச்
செவியாம னீசெவி நன்னெஞ்ச மேமுத்தி சித்திக்குமே
தவியா திருவருள் வாள்சிவ காம சவுந்தரியே. (௫௧)

அலைக்கே யகப்பட்ட கோல்போ லுழன்றங் கனையர்மயல்
வலைக்கே வசப்பட்டு நாயடி யேனிற வாவண்ணமே
விலைக்கே யெனைக்கொண்டு நின்னூழி யங்கள்செய் விக்கவென்றன்
றலைக்கே பதம்வைத் தருள்சிவ காம சவுந்தரியே. (௫௨)

அடுத்தார்க் கினியசெந் தேனே தமிழினின் னற்புதப்பா
தொடுத்தார்க் கருள்செயும் பேரின்ப மேயென்முன் றோன்றியருள்
கொடுத்தா தரித்தெனை யெக்கா லுமாட்கொண்டென் குற்றமெலாந்
தடுத்தாள்வ துன்கட னேசிவ காம சவுந்தரியே. (௫௩)

குணக்குன்ற மேவனை யோன்பெற்ற கோமளக் கோகிலமே
மணக்குன்ற மேபுது வாபுரி மேவி மகிழுமிலக்
கணக்குன்ற மேநின் பழவடி யார்க்குக் கனிந்தருள்சந்
தணக்குன்ற மேயருள்வாய்சிவ காம சவுந்தரியே. (௫௪)

வருங்காளந் தானுண் டமரரைக் காத்த வயித்தியப்பன்
பெருங்காதல் கொள்ள வலப்பாகம் பெற்ற பிராட்டியிங்கு
கருங்கால னூதர் வருமுன மேயெனைக் காக்கவருள்
தருங்கா ரணியிரங் காய்சிவ காம சவுந்தரியே. (௫௫)

வானே கருணை வடிவேகல் வாக்கருண் மாமணியே
கானேர் கனங்குழற் கற்பக மேயருட் கட்கரும்பே
மானேர் விழிமலை மானேயெம் மானிடம் வாழ்மயிலே
தானே புதுவை வளர்சிவ காம சவுந்தரியே. (௫௬)

வாதோவென் மீதி லுனக்கடி யேன்செய்த வன்கண்மைக
ளேதோநின் சித்த மறிந்தில னேயிதற் கென்செய்குவேன்
போதோ கழிகின்ற தென்பிழை யாவும் பொறுத்தருளத்
தாதோகை யேபுது வைச்சிவ காம சவுந்தரியே. (௫௭)

எமராஜன் வந்திடுங் காலன்னை யேயென்னை யேன்றுகொண்டு
குமாரவஞ் சேயிலன வேபய யத்தக் கொடுப்பதற்குச்
சமரா புரிக்கா சின்றநின் னுட்டஞ்ச மன்றிமற்றுத்
தமரா மருள்புது வைச்சிவ காம சவுந்தரியே. (௫௮)

பாழான வென்னெஞ்சம் வன்னெஞ் சனைய பரத்தையர்பால்
வீழாத நாளில்லை யென்செய்கு வேன்வெவ் வினையகற்றி
வாழாத குற்றமு நாண்மலர் தூவிநின் மாமலர்த்தா
டாழாத குற்றமுந் தீர்சிவ காம சவுந்தரியே. (௫௯)

மைவிட்டி டாவிழி மானே வயித்திய நாதர்சற்றும்
மெய்விட்டி டாவின்ப மேபுது வாபுரி வித்தகமே
பொய்விட்டி டாப்புன் றொழிலுடை யோனைப் புரக்குமென்னைத்
தைவிட்டி டாதருள் வாய்சிவ காம சவுந்தரியே. (௩௰)

கனியேயென் கண்மணி யேயுனை நாளனு காவிடினு
முனியே லருள்கமெய்ஞ் ஞானமிம் மூடற்கு முற்றுமுன்போ
லினியேது யேதுவி னாலும் பராமுக மேபுரியேல்
தனியே புதுவை வளர்சிவ காம சவுந்தரியே. (௩௧)

நாட்டுக் கிசைந்த புதுவைக்கு வாய்த்தவன் றாயெனது
பாட்டுக் கிசைந்தருள் செய்யா விடினும் பரமனரு
ளாட்டுக் கிசைந்த வருட்கட லேயடி யேன்செயும்வா
தாட்டுக் கிசைந்தாவ தாள்சிவ காம சவுந்தரியே. (௩௨)

ஒப்போ தரிய மலைமக ளேயென் றுவந்துனையே
முப்போது மன்பர்கள் போற்றுவ தையிந்த மூடனுங்கண்
டெப்போது மேத்தி யிடர்நீங்கி வாழ்தற் கிசைந்துநின்பா
தப்போதிற் சேர்த்தருள் வாய்சிவ காம சவுந்தரியே. (௩௩)

கோளே புரியுங் கொடியேன்செய் யெவ்வகைக் குற்றமுமின்
னாளே பொறுத்திந்த நாயடி யேன்கதி நண்ணவிலை
யாளே யெனக்கொண் டருள்செய நின்னிரு வங்கமலத்
தாளே துணைபுது வைச்சிவ காம சவுந்தரியே. (௩௪)

வலைப்பட்ட மானென வாடுகின் றேனைவெம் மாயையெனு
மலைப்பட்ட கோலென வாக்கிமின் னார்கட் கடிமையென
விலைப்பட்ட வென்மன மெங்கிருந் தேழைக்கு வேணுமென்று
தலைப்பட்ட தோவறி யேன்சிவ காம சவுந்தரியே. (௩௫)

வாரணம் பூத்த தனத்தாய் வயித்திய நாதர்மகிழ்
காரணம் பூத்த கயற்கணி யேகட் கமழ் கரும்பூந்
தோரணம் பூத்த புதுவையென் தாயெற்கை தூக்கருள்வைத்
தாரணம் பூக்கமுத் தேசிவ காம சவுந்தரியே. (௩௬)

மட்டுண்ட கொன்றைச் சடையான்பொன் னம்பல வாணன்வந்திப்
பிட்டுண்ட பித்தனென் றேயறிந் தேயவன் பேரிலிச்சைப்
பட்டுன் மடுத்துச் சுகப்பட்ட நீபந்த பாசத்திற்
றட்டுண்ட வென்னைக்கண் பார்சிவ காம சவுந்தரியே. (௬௭)

கைகண்ட சிற்றெறும் பேதேனு நீங்கிடு மோதினது
மெய்கண்ட நானு முனைப்பிரிந் தேதும் விரும்புவனோ
மைகண்ட கண்ட முடையான் மருங்கில் வளர்கின்றநீ
கைகண்ட தெய்வமன் றோசிவ காம சவுந்தரியே. (௬௮)

புண்ணிய மேபுது வைக்கர சேயிந்தப் பூமியிலென்
பண்ணிய பாவமெ லாம்பறந் தோடக்கண் பார்த்தெளியே
யெண்ணிய வெண்ணமெ லாங்கடைத் தேறற் கிசைந்தருள்வாய்
தண்ணிய தூய்விளக் கேசிவ காம சவுந்தரியே. (௬௯)

சித்தே யெலாஞ்செய் திடவல்ல ஞானச் செழுஞ்சுடரே
முத்தே முதற்பொரு ளேமுது நூல்கண் மொழிமுத்திக்கு
வித்தே புதுவைக்கு வித்தக மேயறி வேவிளங்கச்
சத்தே யருள்புரி வாய்சிவ காம சவுந்தரியே. (௭௰)

திரையேற்ற செஞ்சடை யானைப் பதியெனத் தேர்ந்துகொண்ட
வரையேற்றுக் கொண்ட மடக்கொடி யேவரை மாமகளே
பிரையேற்றுத் துன்பக் கடல்வீழ்ந் துழலு மெளியனையே
கரையேற்று நற்கதி யாஞ்சிவ காம சவுந்தரியே. (௭௧)

வேய்முடிக் கொண்ட வனத்துவந் தாயெனை வெம்பிணியாம்
பேய்முடிக் கொண்டதை நீயகற் றுப்பிள்ளை பீர*ருந்த
வாய்முடிக் கொண்டமு தால்வழங் காது வளமுலையைத்
தாய்முடிக் கொள்ளுவ ளோசிவ காம சவுந்தரியே. (௭௨)

கொன்னே கழிந்ததென் வாணாளக் கோவிக் குவலயத்துக்
கன்னே புதுவை வயித்திய நாதருக் கன்புடைய
பொன்னேயக் குற்றம் பொறுத்தெளி யேனைப் புரந்தருள்வாய்
தன்னே ரிலாப்பொரு ளேசிவ காம சவுந்தரியே (௭௩)

*பீர்-முலைப்பால்

அலையான் மலிகடல் சூழுமிப் பார்மிசை யந்துகின
மலையான் மகளெனும் வாழ்வேயிவ் வேழை மனத்துறுகம்
பலையான் மிகமெலிந் தேனெனக் கேயருள் பாலிணையந்து
தலையான் மருங்கில் வளர்சிவ காம சவுந்தரியே. (௭௪)

விடங்கொண்ட கண்டத் தவன்புது வாபுரி மேவிமன்று
ணடங்கொண்ட தைக்கண் டுளங்கனி வோய்நினை நண்ணுதற்குத்
திடங்கொண் டிடச்சிந்தை செய்யாதில் வாழ்வினிற் சிக்கிடும்பொய்ச்
சடங்கொண்ட வென்னைக்கண் பார்சிவ காம சவுந்தரியே. (௭௫)

தீபங்கண் டாலிரு ளின்றிடு மோநின் றிருவுளத்தின்
கோபங்கண் டாலுமென் கோதறு மேநற் குணமொன்றிலேன்
சோபங்கண் டாயினு மன்றேயிவ் வேழை துடிக்கும்பரி
தாபங்கண் டாயினுங் காசிவ காம சவுந்தரியே. (௭௬)

முன்னஞ்ச முண்ட மிடற்றனுக் கேமுற்று மோகங்கொண்ட
அன்னஞ் சவிக்கு நடையுடை யாயுனை யஞ்சலியா
வன்னெஞ் சுடைய மடியேனுக் காக வனப்புறுநின்
றன்னெஞ்ச முங்கல்கொ லோசிவ காம சவுந்தரியே. (௭௭)

வேளினைக் காய்ந்த வயித்திய நாதர் விளைமலர்ப்பூந்
தோளினைத் தோய்ந்த சுகப்பொரு ளேவன் றுயர்புரிந்தென்
னுளினைப் போக்கிய காயேனு நற்கதி நண்ணநின்றன்
றுளிணை யேதஞ்ச மேசிவ காம சவுந்தரியே. (௭௮)

கங்கா னார்நுதற் கண்ணிய னார்மலைக் கண்ணமர்மா
னங்கா னார்பங் கமர்ந்தவன் னையரு ளாயடியார்
தங்கா மேவுச தானந்த னார்புது வைத்தலத்திற்
சங்கா னார்மகி ழுஞ்சிவ காம சவுந்தரியே. (௭௯)

பண்ணாலு மாமறைக் கெட்டாத வின்பப் பரஞ்சுடரோ
மண்ணாலு மண்வினை பொன்னாலும் வையக வாழ்வுக்குற்ற
பெண்ணாலு நொந்தயர் வேனுநின் சேவடி பேணவிரு
தண்ணாருங் கண்கொண்டு பார்சிவ காம சவுந்தரியே. (௮௰)

காதார் நெடுங்கண்ணி பங்கயற் கண்ணிமுக் கண்ணினனுக்
கேதார மான வெழிற்புது வாபுரி யேந்திழையே
மாதா வயித்திய நாதனெப் போது மகிழ்பாம
தாதா வெனக்கருட் டாசிவ காம சவுந்தரியே. (௮௧)

செல்லேனின் சந்நிதிக் கேபணிந் தேத்தநற் சிந்தைசற்று
மில்லேன் புதுவைக் கிசைந்தவன் ஞயுன்ற னின்புகழைச்
சொல்லேன் மயக்கத் தொடக்கற வேண்டுஞ் சுகத்தினிற்பித்
தல்லே னெனினும்வந் தாள்சிவ காம சவுந்தரியே. (௮௨)

இந்தர்; சடைமுடி யான்மருங் கேவள ரேந்திழையே
கொந்தா ரொழிற்பொழில் சூழ்புது வாபுரிக் கோமளமே
அந்தா மரையன்ன மேயெனை யேன்றுகொண் டாண்டினருள்
தந்தா குலந்தவிர்ப் பாய்சிவ காம சவுந்தரியே. (௮௩)

பெண்மணி யேயண்ட பிண்டமெ லாமளிப் பெற்றிகொண்ட
வொண்மணி யேயொப் பிலாமணி யேபுக ழோங்கிவள்ர்
கண்மணி யேபுது வைப்பதி மேவுசி காமணியே
தண்மணி யேயருள் வாய்சிவ காம சவுந்தரியே. (௮௪)

பண்டே புரிந்த பழவினை யாவையும் பற்றறுத்தன்
தொண்டே புரியத் துணைசெய்கு வாய்நறை தோய்ந்தமலர்ச்
செண்டே புதுவை வயித்திய நாதர் தினமகிழுந்
தண்டே மலர்முகத் தாய்சிவ காம சவுந்தரியே. (௮௫)

இணையேது மின்றிய தேவே பிறவி யெனுந்திரைக்குப்
புணையே புதுவையிற் பூரண மேமெய்ப் புலனளிக்குந்
துணையேயென் றுன்பந் துடைத்தாள் வதற்குத் துணிந்தெனக்குத்
தணையேயி னேக்கருள் வாய்சிவ காம சவுந்தரியே. (௮௬)

பானுக்குங் காவலப் பூனைக்குந் தோழனென் பாரதுபோன்
மானுக்கு ளாக்கி மதியளித் தஞ்சம் மதித்திருந்தாய்
சேனுக்கு நேர்விழி யாளே யுனைத்துதி செய்துய்யவென்
றூனுக்கு வாக்களிப் பாய்சிவ காம சவுந்தரியே. (௮௭)

திரங்காட்டிச் செப்பினைச்*சேக்கையைக் காட்டிக்கண் ணைச்சிமிட்டிக்
கரங்காட்டிக் கூவியன் கைப்பொரு ளீட்டியென் கன்மநெஞ்சக்
குரங்காட்டிச்†சேய்மையி னிற்குமின் மாதர் குழாந்துறக்கத்
தரங்காட்டி யாளெனை யேசிவ காம சவுந்தரியே. (௮௮)

கொடுக்கின்ற பேர்க்குக் குறையொன்று மின்றிக் குறித்துனையே
யடுக்கின்ற பேர்க்கரு ளீந்தேசெம் பாத்தமி §ழாலலங்கல்
தொடுக்கின்ற வர்க்கிங்கு சோதனை யாவுந் தொடாதிருக்கத்
தடுக்கின்ற தெய்வமு நீசிவ காம சவுந்தரியே. (௮௯)

வாராத வல்வினை வந்தாலு மத்தை மறுத்தெனையே
சேரா திருக்கச் செயலளித் தேசிறி யேன்முயற்சி
சோரா திருக்கவுஞ் சித்திபெய் நாளுந் துலங்கவுஞ்சீர்
தாரா திரேல்புது வைச்சிவ காம சவுந்தரியே. (௯௰)

இமைய மலைக்கர சின்றவ னுயெழி லேலுவந்த
உமையவ ளேயடி யேனுய்ய வானிங் கொருகுறைவும்
அமையவை யாதெனை யாதரித் தேதடுத் தாட்கொள்ளவே
சமைய மிதுபுது வைச்சிவ காம சவுந்தரியே. (௯௧)

உடையா யொளிரும்வெண் பட்டுடை யாய்கல் லுடுக்குநிக
ரிடையாயெம் மானிடை யாயெளி யேனை யினிப்பிறக்கப்
படையாயன் கைமழு மான்படை யாயுயர் பைந்தரும்பூஞ்
சடையாய் புதுவை வளர்சிவ காம சவுந்தரியே. (௯௨)

குற்றேவல் செய்யுநின் மாணடித் தொண்டர் குழாத்தைவலஞ்
சுற்றேன் தொழுதறி யேன்றுதி யேனவர் தொண்டுசெய
மற்றேதுஞ் செய்ய வகையறி யேனினி வாழ்வதற்கே
சற்றே கடைக்க ணருள்சிவ காம சவுந்தரியே. (௯௩)

வாயுண்டு வாழ்த்திடச் சென்னியு முண்டு வணங்கிடவே
நீயுண்டு பாவிக்க வேவருந் தேலைய நீங்கியுய்வாய்
கோயுண் டுழனு மடநெஞ்ச மேயரு ளோக்களிக்கத்
தாயுண்டு தென்புது வைச்சிவ காம சவுந்தரியே. (௯௪)

---

*சேக்கை=ஸ்தனம். †சேய்மை=தூரம். §அலங்கல்=மாலை.

வான்செய்த நன்றியை யார்தடுத் தாரிந்த மானிலத்தி
னூன்செய்த குற்றம் பொறுத்தெனை யாண்டரு ளல்லிலவற்
கேன்செய் தனையென் றுனைத்தடுப் பாரெவ ரோயிமவான்
றுன்செய் தவக்கொழுந் தேசிவ காம சவுந்தரியே. (௬௫)

அடல்விடை யார்வயித் திசர்பங் கேயம சாசருளே
யுடலுயி ரேயுயிர்க் குண்ணின் றிலங்கு முயரொளிவே
மடலவிழ் ஞான மலரோ வெனக்கன்பு வைத்துமங்காச்
சடலகன் கீபுது வைச் சிவ காம சவுந்தரியே. (௬௬)

உன்னரி தாமுன் றிருநாமந் தன்னை யுவந்துரைப்போர்க்
கென்னரி தாமுன் னருள்பெறில் யாவர்க்கு மேழ்பிறப்பும்
பின்னரி தாம்புது வைப்பதி மேவிப் பிறங்கிடும்வே
தன்னரி கண்டறி யாச்சிவ காம சவுந்தரியே. (௬௭)

என்செய லாலிங்கி யாதொன்று மில்லையென் பேனெருக்காற்
புன்செயன் மாயையி னென்செய லென்று புலம்பிடுவேன்
பின்செயல் யாவுமறியே னினிப்பெறும் பேரின்பநின்
றன்செய லாக்கி யருள்சிவ காம சவுந்தரியே. (௬௮)

அடியே னெனச்சொல்வ தல்லாலுனின் பொன்னடிக் கன்புசெயப்
படியேன் பதைத்துரு கேன்பணி யேன்நின் பணிவிடைசைப்
பிடியேன் பிறர்க்குப காரஞ்செய் யேன்மனப் பேதமையா*
சடியே னெனினுங்கண் பார்சிவ காம சவுந்தரியே. (௬௯)

குருவாய் வி[illegible]ங் கு[illegible]தெய்வ மேருநி கொள்ளுமின்ப
வுருவாய் விளங்கு முய[illegible]ரொளி வேயுரித் தோடுனது
திருவாய் மலர்ந்தஞ்சி [illegible]லெனக் கூறிநின் சீரருளே
தருவா யிதுதரு ணஞ்சிவ[illegible] சவுந்தரியே. (௭௰)

---

*ஆசு=குற்றம்.

(முற்றிற்று.)

# சாத்துகவி

சேற்றூர்ச் சமஸ்தான வித்வான்

அருணாசலக்கவிராயரவர்கள்

இயற்றியவை.

## நேரிசைவெண்பா.

மையல்பா காங்குழல்சொன் மங்கையர்க்கு மாரனெனுந்
தையல்பா காநின் றமிழ்வெண்பா—வையமிசை
வந்திக்கு மாரமென மார்பின் மகிழ்ந்தணிவார்
செந்திக்கு மாரர் தினம். (க)

முந்தவெண்பா வெல்லா முருகர்மே னீமொழியு
மிந்தவெண்பா வெல்லா மெனவெழீஇ—வந்ததனாற்
பான்மதியா மேற்றையல் பாகவா தாவினி[illegible]மேல்
யான்மதியாற் சொல்வ தெவன். (உ)

கூடுபுக ழேந்தியொட்டக் கூத்தனொடு நீயு[illegible]ம்மெய்க்
கூடுபுக ழேந்தியொட்டக் கூத்தனையே—[illegible]டி
வருந்தையல் பாகமன்ற வள்ளிமண வா[illegible]ற்
கருந்தையல் வெண்பாச்சொற் ற[illegible] (ங)

செவிக்கின் னாமதுனத் தீங்குரல்போற் கேட்டேன்
செவிக்கின்ன தீர்ப்பன்செந் திற்சேய்—புவிக்கெல்லா
மின்னமுதம் போனீ யியம்புவெண்பா வெல்லாமுங்
கன்னனெனுந் தையல்பா கா. (ச)

ஒட்டப்பிடாரந்தாலுகா ஒசமாக்குளங் கிராமமுன்சிபு வித்வான்

## சிவ. கயிலாசநாதபிள்ளையவர்கள்

இயற்றியவை.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

சிலையாழி தரித்தகரத் திருமாறன் மருகனுயர் செவ்வேணன்னீ
ரலையாழிகொழித்த முத்தநிலவுமுழுந் திருச்செயந்தி யண்ணன்மீது
விலையாருஞ் சொலற்கருமந்தாதி வெண்பாத்தொடைசதமாய்வியந்
தாய்ந்தன்பாய்க், கலையாவு முணர்ந்தறி மெய்ப்பத்தியினாற் றொடுத்
தணிந்தான் களிப்பான்மிக்கோன். க

மதிதவழுந் தண்டலைசூழ் வில்லிபுத்தூர் மணிமுத்து மகிபனீன்ற
நதிகுலசிந்தாமணி சண்முகற் கிளையோன்நெல்லை நகர் நண்ணிவாழ்
வோன், [தோய்ந்த
நிதியுள கோன்றனக்கு நிகர்செயுங் கருணைக் குமரனருணிதியைத்
பதிநலங்கைக் கொண்ட தையல்பாக மெனப்பெயர் விளங்கும் பாவ
லோனே. உ

திருநெல்வேலியிலிருக்குந் தட்டப்பாறை வித்வான்

## உமையொருபாகம்பிள்ளையவர்கள்

இயற்றியது.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பன்னகப்பணிபூண்டோன் புதல்வனெனவந்த செந்திற்பகவன்மீது
முன்னாகச் செந்தமிழின் மொழிந்த முதியரும் வியப்பமொழிந்தா
வின்னுளிலே தையல்பாகவே வி[illegible]டுமிந்நூலை நாளுஞ் [னம்ம
சொன்னாலுங் கேட்டாலு நினைத்தாலுங்கயிலை மலைசொந்தமாமே.

உ

சிவமயம்.

# திருச்செந்தில்வெண்பாவந்தாதி.

## காப்பு.

நண்பான செந்தி னகர்வள்ளி நாயகன்மேல்
வெண்பாவந் தாதிதனை விள்ளவே—பண்பான
சொற்களமை யும்படிசெய் தூண்டி விநாயகன்றன்
பொற்கமலத் தாளிணைகாப் பு.

## நூல்.

சீர்மேவு செங்கமலத் தேவாழ் திருவளரு
மோர்மேவு செந்தினக ரீசனே—கூர்மேவு
வேலா விமலா விசாகா விமலையருள்
பாலா வெளியனைக்கண் பார். (௧)

பாசாம னீயிருந்தாற் பார்மீதி னாயடியேன்
ஆர்பாற் சென்றுரைசெய் தாறுவேன்—ரொரு
நித்தா வெனதுகுறை நீங்கிடவின் னேசெந்திற்
கத்தா நினதுகடைக் கண். (௨)

கண்ணார் கருணைக் கடலே களிகூர்ந்து
விண்ணார் சிறைமீட்ட வேலோனே—பண்ணார்
மறைமுழுதும் வாழ்த்துசெந்தின் மாமயிலோ னேயென்
குறைமுழுதுந் தீர்த்தெனையாட் கொள். (௩)

கொள்ளுபவ னானீ கொடுப்பவனன் றேவதற்கு
விள்ளுவதென் கைம்மாறு வேலோனே—யுள்ளுவது
முன்னையே நாயே னுளக்கவலை தீர்த்தருள்வா
யன்னையே செந்தினிலை யா. (௪)

ஐயா திருச்செந்தி லாண்டவா வுன்னையன்றி
மெய்யான தெய்வமிங்கு வேறுண்டோ—பையாவென்
றென்னையே யேன்றென் னிடர்தீர்த் தருளுவதுன்
றன்னையே சார்ந்ததுகந் தா. (௫)

கந்தா செயந்திக் கருணா காவெனது
நந்தா மணியேயிந் நாயடியேன்—சிந்தா
குலந்தவிர்த்தாண் டின்னே குடியடிமை கொள்வாய்
நலந்தருமுந் நான்குநய னா. (௬)

நாவுக் கழகுனது நல்லா றெழுத்தோதல்
பாவுக் கழகுனையே பாடுவது—கோவுக்
கழகுசெங்கோ லாஞ்செந்தி லானே வழகுன்
குழகுபத மென்சென்னிக் கு. (௭)

சென்னியிரு மூன்றுடைய தேவே திருச்செந்திற்
பன்னிருகை யாகருணை பாலிப்பா—யுன்னி
யடித்தாலு நீயே யணைத்தாலு நீயே
பிடித்தேனின் பாதநினைப் பே. (௮)

பேதாதி பேதப் பிறப்பிறப்பி லேயலுத்தேன்
வேதாதி பாசெந்தில் வித்தகா—போதாதா
ஐயா வினியென்னை யன்னைவயிற் றிற்பிறக்க
வையா தருள்வேல வா. (௯)

வேலா செயந்தி விமலா விபுதாநு
கூலா வுமையாள் குமரனே—சீலா
புவிப்பிணியெ லாநீக்கும் புண்ணியா வென்றன்
செவிப்பிணியை நீக்கவருள் செய். (௰)

செய்யார் திருச்செந்திற் சேவகா நின்னிருதா
ளையா புகலென் றலறினேன்—மெய்யாக
வேறுபுக லில்லைவடி வேலவா வென்மனதுக்
காறுதறந் தாள்கருணை யால். (௰௧)

ஆலால முண்ட வானு சருமகனே
கோலாக லாசெந்திற் கொற்றவா—வேலாநீ
யண்டரிடர் மட்டு மகற்றவோ வந்ததன்றித்
தொண்டரிடர் நீக்கவுமோ சொல். (௰௨)

சொல்லும் பொருளுஞ் சுவைதோய்ந்த நாற்கவியா
லல்லும் பகலுமுனை யான்பாட—நல்லறிவு
தந்தாள நல்ல சமய மிதுசெந்திற்
கந்தா கடம்பாகு கா. (௰௩)

காவென் றுனையடைந்தேற் காக்கவென்னு லாகாது
போவென்றுற் செந்திலையா போவேனோ—தாவென்று
கேட்டவா நீயருளுங் கீர்த்தியுள்ள தெய்வமென்று
நாட்டவர்கள் சொல்லுவதி னால். (௰௪)

நான்முகனு நாரணனு நான்மறையு நண்ணரிய
மான்மகனைக் காய்ந்தபெரு மான்மகனே—வேன்முருகா
ஏற்றமுள்ள செந்திநக ரீசனே யென்குறையை
யாற்றவிது நல்லசம யம். (௰௫)

சமய மிதிலென்னைத் தற்காக்க வேண்டு
மிமய மலைக்கரச னீன்ற—வுமயவடன்
பாலா திருச்செந்திற் பண்ணவா பத்தாறு
கூலா கலியுகமெய்க் கோ. (௰௬)

கோழிக் கொடியுயர்த்த கோவே திருச்செந்தி
லாழிக் கரையுவந்த வண்ணலே—காழித்
திருஞான சம்மந்த தேசிகனு வந்த
வருண்ஞான வாவென்னை யாள். (௰௭)

ஆளே யெனவென்னை யாண்டவா நாயேற்கி
நாளே யருள்செந்தி நாயகா—வேளைபின்
னேயோர் சமய நினக்கருள்வோ மென்னிலப்போ
தாரோ வெவரோவை யா. (௰௮)

ஐயாவை யாவென் றலறினேற் குக்கிருபை
செய்யா யெனிற்செந்திற் சேவகா—வையமதி
லெல்லோருங் கூடி யிகழ்ந்துன்னை வேணுமென்று
கல்லோசெம் போவென்பர் காண். (௰௬)

காண்டகைய நின்பொற் கழலடியேன் றஞ்சம்வேல்
பூண்டகையா செந்திலுயர் புங்கவா—மாண்டகைய
பண்டிதஞ்செய் தன்பனைக்காப் பாற்றுவோ யென்செவிநோய்
கண்டிதஞ்செய் தாள்ஷண்மு கா. (௨௰)

காவாயென் றுன்பக் கருங்கடல்விட் டேகடத்த
நாவா யெனுஞ்செந்தி னாதனே—பாவாய்ந்த
நாவலா வுன்கிருபை நல்கியே நாயேனைச்
சேவலா நீயிப்போ தே. (௨௧)

தேனார் பொழில்சூழ் திருச்செந்தி லேநினக்கன்
பானார் குறைநீக்கு மண்ணலே—மானாருங்
கையா னளித்த கருணால யாவருண்முத்
தையாநான் கேட்கும்வரத் தை. (௨௨)

வரமளிக்கு நோயற்ற வாணா ளளிக்குந்
திரமளிக்குந் தீங்கற்ற செல்வ—முரமளிக்கு
நீளோர் கருணை நிலவுதிருச் செந்திநிற்செவ்
வேளேந்துஞ் சத்திவடி வேல். (௨௩)

வேலைப் பிடித்தமரர் வேதனைவி லக்கினநின்
காலைப் பிடித்தேனைக் கைவிடேல்—சோலைவளஞ்
சூழ்சந்த நாசயிலஞ் துன்னுதிருச் செந்தூரில்
வாழ்கந்த னேயெனையாள் வா. (௨௪)

வானவரைக் காத்தமயில் வாகாநீ யெற்காத்தா
லேனவனைக் காத்தாயென் றெள்ளுவரர்—மோனவநின்
னீளடிக்குச் செந்திநகர் நின்மலா நித்தமுநா
னாளடிமை யானபடி யால். (௨௫)

படியார் புகழும் படிநீ யெனக்கெப்
படியா னுங்கடைக்கண் பார்ப்பாய்—துடிநே
ரிடைவள்ளி தெய்வானைக் கேற்றமண வாளா
தடையின்றிச் செந்தினிற்கந் தா. (௨௬)

கந்தாவென் றுன்னைக் கருதினேற் கென்றுநலந்
தந்தாள்வ துன்கடமை தானலவா—இந்தார்
சடையா னருள்செந்திற் சண்முகா வென்னைக்
கடையானென் றெள்ளேல்கு கா. (௨௭)

குகனேசெந் திற்குக் குடக்கொடியாய் கூத்தன்
மகனே வயில்வேல வாசே—வகனேநீ
சோதிக்க வென்றெனக்குத் துன்புபுரிந் தாலதுநின்
னீதிக் கடாதுணைத்தே னே. (௨௮)

உளையறியா மாற்றி லுயர்பொன்னே செந்திற்
களையறியா ஞானக் கடலே—புளையறியா
வொண்மணியே நாயேற் குறுங்கவலை தீர்த்தருளென்
கண்மணியே வேற்கைமுரு கா. (௨௯)

முருகாபன் னுளாய் முறையிடுத னின்பன்
னிருகாதி லேற விலையா—அருகாருஞ்
செஞ்சடையான் சேயென் செவிநோயைத் தீர்க்கவுன்னெஞ்
சஞ்சடையேல் செந்தினு தா. (௩௰)

நாதா திருச்செந்தி னாயகா நன்கினிய
தாதாவென் றுன்னைச் சரண்புகுந்து—மீதார்க்கு
வந்தவிருந் தோவென்று வாய்மூடிக் கொண்டிருந்தா
லெந்தவித மீடேறு வேன். (௩௧)

எற்ற சமயமெனை யென்றுகொளச் செந்தூரில்
வீற்றிருக்கும் வேலவிது விட்டிடேல்—ஆற்றவுனை
மன்றுடிக் கொண்டேன் மகிழ்ந்தென்னை யாடில்லை
மன்றுடி யீன்றபர மா. (௩௨)

பரமென் றுனையடைந்தேன் பன்னிருகை யாநீ
தாமன்று போவென்று தள்ளேல்—புரமன்
றெரித்தபிரா னீன்றசெந்தி லீசா வெனையா
தரித்தனைபோ லாள்குருநா தா. (௩௩)

குருநாதா நாற்கவியாற் கோமளமாப் பாட
வருநாதா செந்தில் வரதா—வொருநா
வலனாக வூமனுக்கும் வாக்களித்தோய் நல்ல
பலனாக வேகந்தப் பா. (௩௪)

கந்தப்பா செந்திற் கடப்ப மலரார
விந்தப்பார் செஞ்சடில ரீன்றவா—சந்தப்பாப்
பாடும் படிக்கும் பணிநின் பதாம்புயத்தை
நாடுமெளி யேனுக்கு நா. (௩௫)

நானா விதமான ஞாய மெடுத்துரைத்து
மேனாதா னுமென் றிருப்பாயேற்—றானாக
வென்னைவந்தாள் வாரா யெழில்செந்திற் கந்தாவிங்
குன்னையினிக் கையெடுப்ப ரோ. (௩௬)

எடுப்பா ளணைப்பாணல் வின்சொலுட னேபால்
கொடுப்பாள் திருச்செந்திற் கோவே—யடுத்தடுத்துச்
சொல்லிக்கொண் டாலோ துயர்களைவாய் மற்றன்றே
தல்விக்குப் பிள்ளையுரைத் தா. (௩௭)

தாயே திருச்செந்திற் சண்முகா வுன்றனைப்போ
னாயேற்கிங் காருண்டு நல்ல துணை—நீயே
கொடுப்பதற்குங் காப்பதற்குங் கூடியவன் மேனா
ணடிப்பதற்கு மாங்குலதெய் வம். (௩௮)

தெய்வத்தைக் கையெடுத்த றேடுவாங் கைகூடி
யுய்வதற்கல் லாதுமற்று முண்டோவென்—னைவகற்ற
வெத்தனையோ கும்பிடுபோட் டேத்தினேன் செந்தில்வளர்
கத்தனே யவ்வாறே கா. (௩௯)

காசினியி லுள்ள கடும்பிணியெல் லாமகற்றுந்
தேசிகா வென்செவிநோய் தீர்ப்பதற்கு—மாசி
லலைசூழ் திருச்செந்தி லானேநின் பன்னீ
ரிலைநீறு நல்லமருந் தே. (சயி)

தேசத்திற் கண்கண்ட தெய்வநீ யென்றவிசு
வாசத்தி லேநான் மகிழ்ந்திருந்தும்—நீசற்று
மேறிட்டுப் பார்க்கா திருந்தாற்செந் தூராவெவ்
வாறிட் டளநீக்கு வாய் (சஎக)

ஆயுங் கலைவல்ல வாநின் னடிக்கமலந்
தோயும் படிக்குத் துணைச்செய்வாய்—தாயுநீ
யன்றோநா னுன்சே யலவோசெந் தூர்க்கந்தா
நன்றோப ராமுகமா னால் (சஎஉ)

ஆனைமுக னுக்கிளைய வாறுமுக னேதெய்வ
யானைமகிழ் பன்னிருபு யாசலனே—தேனை
வடித்தநினை மாநுகர்ந்த வாசெந்திற் கைவேற்
பிடித்தகுக னேயென்னைப் பேண் (சஎங)

பேணிக் கவிதொடுக்கும் பேதையேற் கென்றுமுய
ராணிப்பொன் னேநின் னருள்புரிவாய்—சேணிற்
கொடிநுடங்குஞ் செந்திநகர்க் கோமானே நானுன்
னடிபணிந்து தஞ்சமென்ற தால் (சஎச)

தஞ்சநீ யல்லாலித் தாரணியி லையடியேற்
கஞ்சலெனச் சொல்வரிலை யாள்குகனே—கஞ்சமலர்ப்
பாதா திருச்செந்திற் பண்ணவா நீபரம
நாதா வறியாத தா (சஎரு)

ஆஆஆ ஆஆஆ ஆஆஆ ஆீஆ
ஆஆஆ ஆதேயென் றலேயென்—ஆஆஆ
ஆஆஆ மைதிரு மண்ணலே செந்தூர்ஆ
ஆஆம ருந்தேவே லா (சஎசா)

வேலு மயிலும் விடாதுவந்து வந்தெனக்கெக்
காலுந் துணைச்செய்வாய் கந்தாமேன்—மேலுந்
தினையா வலம்வள்ளி சேர்செந்தி னாதா
வுனையா னுவக்குமா று. (௪௭)

ஆறுதலை யான்மகவே யாறுதலை யாயெனக்கோ
ராறுதலை நீசொலினுள் ளாறுமே—தேறுதலை
யுன்னையன்றி யார்பா லுறுவே னுயர்செந்தி
லன்னையே பன்னிருகை யா (௪௮)

பன்னிரண்டு கையும் பதாம்புயமும் ஷண்முகமு
மென்னிரண்டு கண்முன் னிலங்கவே—யுன்னிமயி
லுந்திவள்ளி தெய்வானை யோடுசெந்தி னாதாநீ
வந்தினிது வந்தெனையாள் வாய் (௪௯)

வாயார பாட்டா வருத்தப் படுமினது
சேயான வென்செவிநோய் தீர்ப்பதற்குத்—தாயான
வுன்மனஞ்செந் தூரி னுவந்துறையு மொண்வேலா
கன்மனமா சற்றிரங்கிக் கா (௫௦)

இரங்காயே னின்மகிமைக் கேற்காது செந்தி
புரங்காத்த வாமுன் புகழ்கூர்—சிரங்காய்த்த
வன்னையே நின்பதத்தை யண்டினவ னாக்காக்கு
முன்னையே தஞ்சமுற்றேற் கு (௫௧)

தஞ்சமெனச் செந்தில்வளர் ஷண்முகா நின்கமலச்
செஞ்சரண நாயேன் றினம்பணிவேன்—நெஞ்சமதில்
நாட்டாதார் நீபமணி நாதாநின் னாறெழுத்தை
நாட்டாதார்க் குண்டேயின் னா. (௫௨)

இன்னாருக் கின்னபடி யென்றெழுதி னானயனுன்
இன்னாதீ ரேனென் றியம்புவையே—லுன்னாணை
யுன்னைவிடேன் செந்தி லுயர்புனிதா நீதானு
மன்னவற்கு மேலல்ல வா. (௫௩)

மேலாக நின்னைவிட வேறோர் துணையில்லேன்
சீலா வறியுந் திருவுளமே—வேலாநீ
பொய்யா வரங்கொடுக்கும் புண்ணியனன் றேசெந்தி
லையா கருணால யா. (ருச)

கருணால யாவள்ளி காந்தா கடம்பா
தெருணா டொளியே சிகியூர்—கருணா
நிதியே திருச்செந்தி னீடேவ சேனா
பதியே கடைக்கண்ணாற் பார். (ருரு)

பார்புகழ வேண்டியசம் பத்தனைத்து மேயெளியேற்
கோர்புகவ ளித்தருள்வா யீசனே—சார்புசித
வாழ்வே திருச்செந்தில் வள்ளிதெய்வ யானைமகிழ்
தாழ்வேது மின்றியகந் தா. (ருசு)

கந்தன் கடம்பன் கலைதேர் புலவன் சேய்
சந்தவரை சூழ்செந்திற் சங்கரனார்—மைந்தன்கோ
குன்றுபக வேயெறிந்தோன் குக்குடனா சான்குமர
னென்றுமெனை யாடெய்வ மே. (ருஎ)

ஏதுமறி யாதசிறி யேன்மீ திரங்கியொரு
போதுமயங் கேலென்று புண்ணியா—பாதுகாப்
பாயே திருச்செந்திற் பண்ணவா வென்னினிய
வாயே வடிவேல வா. (ருஅ)

வேலைவிட முண்ட விமலனரு ணீபமலர்
மாலையணி மார்புதிகழ் வாணியா—சோலைதொறுந்
தேனிரங்குஞ் செந்திநகர்ச் செல்வனே யென்றுயரால்
யானிரங்க நீயிரங்கா யா. (ருகு)

காயாம்பூ வண்ணன்மரு காகுகா வெஞ்செவியி
னோயாய்ந் தகற்றியரு ளோக்கினேன்—மாயா
நலமீ திருச்செந்தி னன்னகரிற் சந்தா
சலமேவு ஷண்முகநா தா. (சூய)

நாதாவென் றுன்னடியை நாடியவிந் நாயேற்கு
நீதா னருணல்க நோயேல்—வேதா
விதியாமற் றோர்க்கு விளைந்தென்னைக் காக்க
நிதியார்செந் தூர்முருக னே. (௬௧)

முருகா திருச்செந்தின் முத்தையா மாயோன்
மருகாவென் பாலுன் மனந்தா—னுருகா
திருப்பதேன் கந்தாவிவ் வேழையேன் றன்னை
விருப்பமுட னாட்கொண்டு மே. (௬௨)

கொண்டுவிட்டுப் பின்னே குலம்பேசு வாருலகி
லுண்டுமோ செந்திநக ருத்தமா—தொண்டு
மணமாக வெற்கொண்ட வாதமியேன் குற்றங்
குணமாகக் கொண்டணைத்துக் கொள். (௬௩)

கொள்ளையென வின்பங் கொடுத்தாள் குணமாநின்
பிள்ளையெனு நாயேனைப் பேணியே—தெள்ளமுத
வெள்ளமே செந்திநகர் வித்தகா வேலாநின்
னுள்ளமே சாலவுவந் து. (௬௪)

உவாமழி வையத் தெனைப்போ லுரிமை
யெவராவார் செந்திநக ரீசா—தவரா
வரங்கொடுக்குந் தோகைமயில் வாகா வபய
கரங்கொடுத்தின் னேயென்னைக் கா. (௬௫)

கானவள்ளி காந்தா கருணா காக்கடலே
வானவர்நோய் தீர்த்தசெந்தின் மாமருந்தே—நானநிறை
மட்டொழுகு நீபமணி மார்பா வெனவுரைக்கில்
விட்டொழிந்து போம்பாவ மே. (௬௬)

மேகங் கவிந்திலங்க மேடம்வளா யேயெழும்பும்
பூகஞ் செறிசெந்திற் புங்கவா—கோகனகப்
பாதாவிந் நாயேன் படுந்துயரந் தீர்ப்பதற்குத்
தாதாநின் னலாகா தா. (௬௭)

ஆதார நாடு மடியேற் குனதுதிருப்
பாதார விந்தப் பணையல்லாற்—சேதார
மீதுவருஞ் செந்திநகர் வெற்றிவடி வேலாவே
றேதும் புகலில்லை யே. (௬௮)

இல்லையென்ப தில்லையென வேயெனக்கெச் செல்வமுமீ
கல்லையில்லாக் கண்டான்றன் கண்மணியே—முல்லைநிறை
செய்யார் பொழில்சூழ் திருச்செந்தி லேவளரு
மெய்யான தேவதே வே. (௬௯)

தேவே திருச்செந்திற் சின்மயா வென்செவியி
னோவே யகற்றியரு ளோங்கினல்—கோவேமுன்
மாண்டவொரு பூனை வளர்த்துவந்த பூசாரி
வேண்டவுயி ரீந்தகுரு வே. (௭௰)

குருவே யெனக்கிந்தக் கோளுலகி லின்னங்
கருவே தனையின்றிக் காக்கத்—தருவேநீ
யல்லாற் திருச்செந்தி லாண்டவா வெவ்விடத்தும்
வல்லார்வே றார்வேல வா. (௭௧)

வேலவா விவ்வுலகும் விண்ணுலகு மேத்துமதி
மேலவா செந்திநகர் வீற்றிருந்தோய்—ஆலவா
யண்ணல் குமரா வடியேன் கடைத்தேறப்
பண்ணல் கடனுனக்கப் பா. (௭௨)

அப்பார் சடில சருமைத் திருமகனே
துப்பாரோர் கன்னித் துாகமுக—மிப்பாரிற்
றீர்த்தவத லாம்ப தீர்த்தமுயர் செந்தில்வளர்
கார்த்திகே யாவென்னைக் கா. (௭௩)

காலன் றனையுதைத்த காலனருள் கந்தாவெக்
கால மெனக்குக் கருணைசெய்வாய்—சிலநினை
நித்தமுநான் மன்றுடி னேன்செந்தி லாயுடனே
சித்தமுவந் தேகிருபை செய். (௭௪)

செய்த பிழையுமினிச் செய்பிழையு மேபொறுத்தென்
னைத லகற்றவரு ணல்குவாய்—கொய்த
மருபாய் மலர்செந்தில் வள்ளிமணா ளாநின்
னிருபாதந் தூவானா யேன். (௭௫)

நாயேன் படும்பாட்டை நானிலத்தோர் பாலுனே
போயே னுரைத்தேன்சொல் புங்கவா—நீயேகேட்
டென்னைக்கண் பாரா திருந்தாற்செந் தூரெந்தா
யுன்னைச் சிரிக்குமுல கு. (௭௬)

உலகமதின் மெய்த்தெய்வ முண்டோவென் றோரோர்
சிலரெடுத்துச் சொல்வர்திருச் செந்தூர்—அலர்கடப்பந்
தாமநீ பார்செவிடர் சப்பாணி கூன்குருடோ
டூமரிடர் நீக்கிடல்கண் டும். (௭௭)

கண்டுமொழித் தாய்வள்ளி காந்தனையக் காற்சூரைக்
கண்டுமொழித் தார்ப்புரந்த காவலனைப்—பண்டுமொழி
வேதமொழி செந்திநகர் வேலனைநெஞ் சேகால
தூதர்வரு முன்னேபோ து. (௭௮)

ஓதக் கடல்வா யுவந்தசெந்தி னாதனைநீ
ஓதக் கடனெஞ்சே யோதினா—னீதமுமா
தேவியா வீன்ற சிகிவா கனனருளா
லாவியீ டைந்துமற லாம். (௭௯)

அறலா சலைவா யமர்ந்ததிருச் செந்தூர்
விறலார் வடிவேற்கைக வேலா—திறல்சூர்
தலையரிந்த சந்தா சலாவென் செவிநோய்
நிலையறிந்து தீர்த்தருளின் னே. (௮௦)

இன்றைக்கோ நாளைக்கோ வின்னம்வரு நாட்களின்மற்
றென்றைக்கோ செந்திநக ரீசனே—குன்றையெறி
வேதா மயின்மேல் விரைந்தேறி வந்தெனக்கு
நாதா வருள்புரியு நாள். (௮௧)

நாளாயி னென்செய்வே னாதாநீ யென்முறையைக்
கேளாது போலிருந்தாற் கிஞ்சித்துந்—தோளா
மணியே திருச்செந்தில் வாழ்வே வள்ளிக்காக்
கணியே ருருக்கொண்முரு கா. (அஉ)

முருகாவென் றன்னை மொழிதரும வல்லைக்
கொருகால் விருகாமீந் தோனுன்—பெருகா
ரருண்மே தினியறியு மன்றோ வெனையாள்
தெருண்மேவு செந்தூர்முத் தே. (அங)

முத்தேமுத் தேவர்க்கு முன்னவா முத்திக்கு
வித்தே திருச்செந்தில் வித்தகா—சித்தி
புரிகரிமு கற்கிளைய புண்ணியா வென்னோ
பரிகரிநின் சித்தமுவப் பாய். (அச)

பாயிருக்கப் பாரிற் படுப்பவரும் போல்வள்ளித்
தாயிருக்கச் செந்தினில்வேல் தானிருக்க—நீயிருக்க
நானே துயர்ப்படுதல் ஞாயமோ தீர்த்தருள்சி
மானே சரவணப வா. (அரு)

சரவணப வாவா தமியேனைக் காக்க
வரவணியா னின்றசெந்தி லன்னாய்—புரவலனே
வேலுமே கைப்பிடித்து வேறுனக்கெவ் வேலையிருந்
தாலுமே சாமிநா தா. (அசு)

தாதாதா தாதாதா தாக்கிளவி யோலமிடு
நாதா திருச்செந்தி னாபகா—ஏதாதா
அன்னை மறந்த வருமதலை யுய்ந்தாலு
முன்னைமறந் துய்யேனென் றும். (அஎ)

என்றுமுளாய் செந்திநகர்க் கின்னிறையே யென்றெனையாள்
குன்றுதொறு மாடுங் குழகனே—சென்றலவு
காருண்ட கூந்தற் கனதனமார் கார்ப்புமுலை
வாருண்ட வள்ளிகண வா. (அஅ)

வாரணியுங் கொங்கைமட வாரின்ப வாரிதியிற்
றாணியி னுயேன்றேய்ந் தாலுமே—சீரணியுஞ்
சென்னியா னீன்றதிருச் செந்தூர னுறெழுத்தை
யுன்னியா னுய்வேனென் றும். (அகூ)

உம்பர் குறைவு முலகோர் தவக்குறைவு
மிம்பாகற் றுஞ்செந்தி லீசனே—கொம்பாற்ற
செங்கொடிபோல் வாடென் செவிநோயைத் தீர்கோழி
யங்கொடி யுயர்த்தகும ரா. (கூ0)

குமரா திருச்செந்திற் கோவே குழகா
வமரா வதிக்கரசீந் தாயென்—றெமராஜ
னுடிவந்தா லுன்னையே நாடுவே னீயன்று
மோடிவந்தாட் கொள்ளெனையேன் று (கூக)

ஏனமமார் தேடரியா னீன்றதிருச் செந்தூர்வாழ்
கானமன மானவள்ளி காந்தனே—ஞானமனஞ்
சாரும் படியெனக்குத் தந்தா ளுனக்கதிக
நேரும் புகழ்நிமல னே. (கூஉ)

நிமலா திருச்செந்தி னித்தனே யாறு
கமலா னனேவயில்வேற் கையா—அமலாவிப்
பாரோர் நின்பொற் பதம்பணிந்து பார்த்தோர்கள்
பாராரோ யன்னைகருப் பை. (கூங)

கருப்பைக்கு ளின்னம்பு காவண்ண மென்றன்
விருப்பைக் கொடுசெந்தில் வேலா—பொருப்பைநிகர்
பன்னிருபு யத்தாய் படைவீ டுடையானே
யென்னிருக ணுமொண்மணி யே. (கூச)

மணியே திருச்செந்தில் வாழ்வேநின் பாதம்
பணியே னெனினும் பரிவாய்—கணியேவா
அஞ்சேலென் றோர்தாஞ்சொன் னுலுமே யென்றனது
நெஞ்சே களிக்குமுட னே. (கூரு)

உடம்பா ருயிர்க்குயிரோ யோசமுயர் செந்திற்
கடம்பா ருமேவு கந்தா—தடம்பாரி
லிச்சமயத் தென்ற னிடுக்கண் களையெவரு
மெச்சவுநான் வாழ்வுறவு மே. (௯௬)

உற்றுள் கிலையேன்மற் றோரிடத்தி னுடேன்நின்
பொற்றாளன் றிச்செந்திற் புண்ணியா—நற்றாய்க்குப்
பான்மா றினுமுலையிற் பல்லிடுமே பைங்குழவி
தான்மா றினுந்தொழுநா தா. (௯௭)

தானேவந் தென்னைத் தடுத்தாட்கொண் டாள்செந்திற்
றேனேயென் கட்டித் திரவியமே—நானேதுஞ்
சொல்லித் தெரிவதென்னைத் தூயாநீ யார்கேட்டுச்
செல்லித் தணைக்கிவ தே. (௯௮)

தேசார் திருச்செந்திற் றீனதயா ளாவெனது
மாசார் செவிவருத்த மாற்றுவா—யீசாவிப்
புன்பிணியை நீக்கல் புதுமையன்றே ஜென்மமெனும்
வன்பிணியை நீக்கவல்ல வா. (௯௯)

வல்லா னறுமுகவன் வாழிவள்ளி தெய்வானை
செல்லார் பொழில்சூழ் திருச்செந்தி—லெல்லாரும்
வாழிமயி லும்வேலும் வாரணமும் வாழிநிதம்
ஊழிகடந் தஞ்சீர்மே வும். (௱)

(முற்றிற்று.)

உ

சிவமயம்.

# புதுவைவயித்தீசுரர் இரட்டைமணிமாலை.

## காப்பு.

---

நேரிசைவெண்பா.

பொன்னுலகும் போற்றும் புதுவைவயித் தீசன்மேன்
மன்னு மிரட்டை மணிமாலை—பன்னுதற்கு
மங்கை சிவகாம வல்லி பயந்தசிவ
கங்கை விநாயகன்றாள் காப்பு.

## நூல்.

நேரிசைவெண்பா.

சீர்கொண்ட நாமகளைச் சேர்ந்த திசைமுகனுங்
கார்கொண்ட மேனியனுங் காணாத—ஏர்கொண்ட
பூதலத்தோ ரேத்தும் புதுவைவயித் தீசனைக்
காதலித்து நெஞ்சே கருது. (௧)

கிளையசைக்கட்டளைக்கலித்துறை.

கருத்தா தவர்க்கில வீடுநெஞ் சேயங் கயற்கணியை
யொருபாகத் துற்றவன் றண்மலர் நாளுமி துண்மையினி
விருதாப் பகலிர வைக்கழி யாதிக்கு வேணியணி
திருவாழ் புதுவை வயித்தி சான்கழல் சிந்தைசெயே. (௨)

வெண்பா.

சிந்திக்க நெஞ்சே சிவனைச் சிரசேநீ
வந்திக்க மாண்புதுவை வள்ளலையே—தந்தி
யுரித்தோனை வாழ்த்துகவா யொண்சடையிற் கங்கை
தரித்தோனைக் காண்க வென்கண் டான். (௩)

### நேரசைக்கட்டளைக்கலித்துறை.

தானே தனித்த சரோரு விந்தந் தலைக்கணிந்த
நானேழ் பவக்கட னீந்தநின் னல்லரு ளவ்வுநல்காய்
தேனே புதுவைச் சிவகாமி பாகத்தைச் சேர்ந்தசெல்வ
வானே மழவிடை யானே மறைமுடி வாழ்பவனே. (௪)

### வெண்பா.

வாழ்விப்பான் முத்தி வழங்கி மனமகிழ்ந்தே
யாழ்விப்பான் பேரின்ப வாழியிலே—தாழ்விலாச்
செல்வ மிகும்புதுவை சேர்ந்தவயித் தீசனை
யல்லும் பகலுநினைந் தால். (௫)

### கட்டளைக்கலித்துறை.

ஆலம் படைத்த விழியார்கள் வஞ்சனை யாற்செயிந்தா
சாலம் படைத்த மயற்பற் றுறுமற் சதாபுதுவை
நீலம் படைத்த மிடற்றுய்நின் னாம நினைந்துருகச்
சீலம் படைத்தெளி யேன்கதி சேரவுஞ் செய்தருளே. (௬)

### வெண்பா.

அருளே யருமறையி னந்தத்தி னிற்கும்
பொருளே புதுவைப் புனிதா—மருள்போ
யடியேன் பிறவி யடையா திருக்கும்
படியே கடைக்கணுற் பார். (௭)

### கட்டளைக்கலித்துறை.

பார்மேவு பண்புடை யோர்புகழ்ந் தோதும் படியெனக்குச்
சீர்மேவு ஞானமுங் கல்வியுஞ் செஞ்சொற் றிரவியமு
மேர்மேவு சீலமு மீந்தருள் வாயெழி லேறிவருங்
கார்மேவு பைம்பொழில் சூழ்புது வாபுரிக் கண்ணுதலே. (௮)

### வெண்பா.

கண்ணருவி வெள்ளங் கசிந்து கரைபுரண்டு
விண்ணருவி வெள்ள மெனவிளங்கித்—தண்ணமிர்த
வெள்ளமே தென்புதுவை வித்தகா வென்றுருகி
முள்ளமே சால வுணர். (௯)

கட்டளைக்கலித்துறை.

உரைக்கேன் புதுவை வயித்திச வுன்பெய ருண்மைகொண்டே
யிரைக்கே திரிந்திர வும்பக லும்மிளைத் தேர்ந்திழையா
சரைக்கே யுழலுந் தமியேனை யின்னரு ளாலமுதக்
கரைக்கே கொடுவந்து காப்பாற்ற லுன்கடன் காணப்பனே. (௰)

வெண்பா.

காண முடியாக் கழற்கூத்தன் கண்டோர்க்கு
வேணவரமளிக்கும் வித்தகனை—மாணரவப்
பூணாரம் பூண்ட புதுவைவயித் தீசனைக்
காணாத கண்ணென்ன கண். (௰௧)

கட்டளைக்கலித்துறை.

கண்ணனை யேயண்ண னென்றோது மங்கையற் கண்ணிபங்கன்
விண்ணனைத் தும்புரப் போன்பணிந் தேத்தும் விமலனையெண்
டண்ணனை யேபுது வாபுரி மேவித் தழைத்தவந்தி
வண்ணனை யேதொழு வோர்க்கில்லை வேறு மறுபிறப்பே. (௰௨)

வெண்பா.

பிறப்பற்று மூப்புப் பிணியற்றெந் நாளு
மிறப்பற் றிருக்கு மிறையோன்—சிறப்புற்றுப்
பெண்ணைவிட்டு நீங்காப் புதுவைப் பிரானழகென்
கண்ணைவிட்டு நீங்காது காண். (௰௩)

கட்டளைக்கலித்துறை.

காணு மிடந்தொறுங் கண்ணெதி ரேவந்து காட்சிதரத்
தோணும் புதுவை வயித்தீசன் சென்னியிற் றேய்ந்திருக்குங்
கோணும் பிறைமுடி யுந்திரு மார்பிற் குழைந்திலங்கும்
பூணு மாவப் பணியழ குந்துணைப் பொற்பதமே. (௰௪)

வெண்பா.

பொற்பதத்தை நாயடியேன் புந்திதனில் வைத்தேத்த
நற்பதத்தைத் தாபுதுவை நாயகனே—வெற்பதனை
வில்லா வளைத்த விமலா வினைதீர்க்க
வல்லாய் மனமே மகிழ்ந்து. (௰௫)

## கட்டளைக்கலித்துறை.

மனமே யுனக்கொரு புத்திகண் டாய்மற வாதுணர்சொற்
பனமே பணியவிப் பொய்வாழ்க்கை யிற்பற்று பற்றிநிதந்
தனமே பெரிதென் றிருந்துவிட் டாய்தக்க தன்றடியா
ரினமே கலந்து வயித்தீ சரன்கழ லேத்துவையே. (௰௬)

## வெண்பா.

ஏத்து மெளியேற் கினியவயித் தீசாகண்
பார்த்துப் பாகதியே பாலிப்பாய்—காத்துனையே
தஞ்சமென்றே வாழுந் தமியேன் றனைத்தயவா
யஞ்சலென்றே சொல்வாரிங் கார். (௰௭)

## கட்டளைக்கலித்துறை.

ஆரண னேயப்ப னேயகி லாண்டமெ லாயளிக்குங்
காரண னேபுது வாபுரி யாய்விற் கனங்கிரியாய்
நாரண னேகணை யாப்புர மூன்றெய்த நாயகனே
பூரண னேவயித் தீசா வெனக்கருள் புண்ணியனே. (௰அ)

## வெண்பா.

புண்ணியமாம் பாவம்போம் பொன்னுலக முங்கிடைக்கு
மெண்ணியநற் கர்மமெலா மீடேறுந்—திண்ணியகார்
சென்றுலவுந் தீம்பொழில்சூழ் தென்புதுவை வாழ்சிவனே
யென்று நிதந்துதிப்போர்க் கே. (௰௯)

## கட்டளைக்கலித்துறை.

பேசானைத் தோலினைப் போர்த்தானைக் கொன்றைப் புதுமலரின்
றாரானை மாற்செங்கந் தந்தானைத் தண்டலை சார்புதுவை
யூரானை மால்விடை யூர்ந்தானை மாதவ மூர்ந்துவருந்
தேரானை யாவையுந் தேர்ந்தானைக் கண்கண்டு சீர்கொண்டதே. (உ௦)

(முற்றிற்று)

சிவமயம்

# திருநெல்வேலி ஸ்ரீகாந்திமதியம்மன் பதிகம்.

## காப்பு.

### நேரிசை வெண்பா.

மாமேவு காந்தி மதியம்மை மேற்பதிகந்
தேமேவு செந்தமிழிற் செப்பவே—பூமேவு
புந்தியுநல் வாக்கும் பொருந்த வருள்புரியுஞ்
சந்திக் கணபதிதன் றாள்.

## நூல்.

### கட்டளைக்கலித்துறை.

நீரணி வேணிப் பிரான்மருங் கேவளர் நேரிழையே
சீரணி வாணுதற் செங்கரும் பேஜகத் தேபுரக்கக்
காரணி யேயடி யேன்கடைத் தேறக் கடைக்கணருள்
வாரணி பூண்முலை யாய்நெல்லைக் காந்தி மதியம்மையே. (௧)

ஆணிக் கனகத் தரும்பொரு ளேயென தாவியுடல்
பேணிக் கருதும் பொருளெனு மூன்றும் பிரபல[illegible]க்
காணிக்கை யாகத்தந் தேனெனை யாளுங் கடனுனக்கு
மாணிக்க மேவளம் வாய்நெல்லைக் காந்தி மதியம்மையே. (௨)

பண்டாடும் பித்தனைப் பாம்பணி யானைத்தன் பாகமுறக்
கொண்டாடும் ஞானக் கொழுந்தே யுனக்கென் குடிமுழுதுந்
தொண்டாடு மாதவி னாலென்றன் றுன்பந் துடைத்தருள்வாய்
வண்டாடும் பூங்குழ லாய்நெல்லைக் காந்தி மதியம்மையே. (௩)

எள்ளா டியசெக் கிடைப்படல் போலென தேழைமனந்
தள்ளா டியல்ல லடையா திருக்கத் தயைபுரிவாய்
கள்ளா டியகடுக் கைக்கண்ணி சூடுங் கனங்குழைபூண்
வள்ளா டியமுகத் தாய்நெல்லைக் காந்தி மதியம்மையே. (௪)

தாழ்வேது மின்றிய சங்கரி யேயித் தாரணி மிசைப்
பாழ்வே தனையி லடியேன் படுந்துயர் பற்றறவே
சூழ்வே னினது கருணையன் றுயான் றேய்சகஞ்சேர்
வாழ்வே கடைக்க ணருனெல்லைக் காந்தி மதியம்மையே. (௫)

தேனேயென் கட்டித் திரவிய மேசெழுந் தீங்கரும்பே
கானேர் கருங்குழற் கற்பக மேயென் கவலைகடீர்ப்
பானே கடைக்க ணருள்புரி வாய்பரி பாலிக்கவே
மானேயெம் மானிடம் வாழ்நெல்லைக் காந்தி மதியம்மையே. (௬)

நாட்டமெ லாமெனக் கேசினக் கேபத்தி நண்ணியன்பர்
கூட்டமெ லாந்தொழ தேத்திட வேகழற் கூத்தன்மன்றி
லாட்டமெ லாங்கண் டுவந்தவன் றுயென தாகமன
வாட்டமெ லாந்தவிர்த் தாணெல்லைக் காந்தி மதியம்மையே. (௭)

பொன்னேயின் னேயெளி யேற்கருள் வாய்ற் புதமிருந்த
மின்னேநின் னோருட் டெய்வமுண் டோவிந்த மேதினியி
லன்னேயென் னுருயி ரோபகி லாண்ட மனைத்தினுக்கு
மன்னேயென் கண்மணி யேநெல்லைக் காந்தி மதியம்மையே. (௮)

புயலாருஞ் செஞ்சடைப் புங்கவன் வாமம் பொலிந்திலங்கும்
வியலாரும் வித்தகை யேயெளி யேன்மெலி வேயகற்றுய்
செயலாரு நத்தலங் காசதர் செல்லுஞ் சிறப்புறுசீர்
வயலாரும் வண்பொழில் சூழ்நெல்லைக் காந்தி மதியம்மையே. (௯)

நாயேன் படுந்துயர் யாவையு மேயிந்த நானிலத்தி
னீயே யறிந்திரங் காவிடி லேழைக்கு நின்னையன்றித்
தாயே புகலினி யார்புக லாய்தயை தந்தருள்செய்
வாயே மழவிடை யாய்நெல்லைக் காந்தி மதியம்மையே. (௰)

வாழிநின் சேவடித் தாமரை யேமறை வாழிமன்னி
வாழிநின் றண்ணளி வாரிதி யேநினை வாமம்பெற்றேன்
வாழியென் னுருயிர் வாழ்வே ஜெகந்தனை வாழ்விக்குநீ
வாழியென் னுநெல் வேலியிற் காந்தி மதியம்மையே. (௰௧)

(முற்றிற்று.)

———∘∘※∘∘———

உ

சிவமயம்

# திருச்செந்தூர்மாதாந்தக்கலித்துறை.

முத்திரை பாயல் புடைசூழ்நின் சந்நிதி முன்புவந்து
பத்திசெய் தேன்வள்ளி பங்கா வுமையருள் பாலகனே
நித்திரைப் போது முனைமற வேற்கிடர் நீக்கெனவே
சித்திரை மாதம்வந் தேன்றிருச் செந்தினிற் சேவகனே. (௧)

பொய்யா முலக நடைநின்று சஞ்சலம் பொங்கவதி
லையாவென் னுள்ள மழலார் மெழுகொத் தழிகின்றதாற்
றய்யா வெனக்கருள் செய்வாயென் றேநினைத் தொண்டுசெய
வைகாசி மாதம்வந் தேன்றிருச் செந்தில் வளர்கந்தனே. (௨)

வேனிற்கு மன்கணை யம்பால் வருந்தி விலைமகளிர்
பானிற்கு நாயடி யேனுய்யு மாறு பணித்தருளென்
றேனித்த நின்கம லப்பதஞ் சென்னி யிறைஞ்சிடவே
ஆனி மதிக்கண்வந் தேன்றிருச் செந்தினி லாரமுதே. (௩)

தேடிய பேர்க்கவர் நாடிய யாவுந் தெவிட்டவினாந்
தோடி யுவந்தளிக் குந்தெய்வ நீயன்றி யுண்டுகொலோ
பாடிய வென்குறை யாவையு நீக்கிக்கண் பாரெனவே
ஆடி மதிக்கண்வந் தேன்றிருச் செந்தினி லாண்டவனே. (௪)

பாவணி வோர்கட் கருள்செயும் ஞானப் பரஞ்சுடரே
பூவணி வோர்குறை யாவையு நீக்கிப் புரந்தருள்கந்
தாவணி யேதுஞ் செயவறி யேற்கரு டாவெனவே
ஆவணி மாதம்வந் தேன்றிருச் செந்தி லறுமுகனே. (௫)

பெட்டா னதுகுடி கொண்டவிப் பார்நடைப் பேய்பிடித்து
முட்டாட் டமும்புரி வேற்குநின் றாருண் முத்திநல்கத்
திட்டா யிருக்கின்ற தென்னும லென்னைக்கை தூக்கெனவே
புரட்டாசி மாதம்வந் தேன்றிருச் செந்தினிற் புண்ணியனே. (௬)

கற்பக காடு செழித்தோங்கச் சூரர் களையறுத்த
மற்புய னேவள்ளி தெய்வானை தங்கட்கு வாய்த்தமன்ன
சிற்பர னேயெளி யேன்றுயர் யாவையுந் தீரெனவே
அற்பிசி மாதம்வந் தேன்றிருச் செந்திணி லாரணனே. (௭)

ஆர்த்திகை செய்தவெஞ் சூரனை வென்றிமை யார்க்கபயம்
பூர்த்திகை வேற்கொண்டு செய்தம யூரம் பொருந்தியுயர்
மூர்த்திகை தூக்கி யெனையாள நீவந்து முன்னிற்கவே
கார்த்திகை மாதம்வந் தேன்றிருச் செந்திணிற் காங்கெயனே. (௮)

சீர்களி தெய்வ வதனங்க ளாறுந் திகழ்கடப்பந்
தார்களி பன்னிரு தோள்களுநந் தாமரைத் தாள்களுமோ
ரோர்களி வள்ளிதெய் வானையுஞ் சேவித் திடர்களைய
மார்களி மாதம்வந் தேன்செந்தில் வாழ்மயில் வாகனனே. (௯)

செய்மா தவஞ்செறி வள்ளிதெய் வானையைச் சேரவென்று
மைமா தருண்மயில் வாகன னேமும் மதமுயரோர்
கைமா தனக்கிளை யோனே யெனையென் றுங் காவெனவே
தைமாதந் தன்னில்வந் தேன்றிருச் செந்திணிற் சண்முகனே. (௰)

காசினி தன்னி லுனையே கருணைக் கடவுளென்று
பேசிய நான்மறை யாதலி னாலென் பிழைபொறுத்துத்
தேசிக னேயடி யேன்றுயர் யவையுந் தீரெனவே
மாசி மதிக்கண்வந் தேன்செந்தில் வள்ளிதெய் வானைமன்னே. (௰௧)

எங்கு நிறைந்த பரமபொரு ளீயென் னிலுமினிதாய்ச்
சங்கு நிறைகடல் சூழசந்த னாசலந் தன்னிலமர்
கொங்கு நிறைகடம் பாரவென் னெண்ணங்கை கூட்டெனவே
பங்குனி மாதம்வந் தேன்றிருச் செந்திற் பதிக்கரசே. (௰௨)

(முற்றிற்று)

---

உ

சிவமயம்

# குறுக்குத்துறைக்குகன்பதிகம்.

## காப்பு.

நேரிசைவெண்பா.

தூய குறுக்குத் துறைவாழ் குகாதினது
சேய கமலத் திருவடியி—னேயமுடன்
நம்பிக்கை யாப்பா நறுமாலை சாத்தியுய்யத்
தும்பிக்கை யான்று ணை.

## நூல்.

கட்டளைக்கலித்துறை.

பூமேவு தென்பொதி காசல மீன்ற பொருளைவள
மேமேவு செல்லையில் வீறுடை யாய்வெற்றி வேலுடையாய்
தேமேவு நின்கடைக் கண்ணரு ளாலென் செவிக்குறைதீர்
தூமேவு ஞானச் சுடரோ குறுக்குத் துறைக்குகனே. (௧)

நீண்டார் புகழ்க்குடி கொண்டவன் ஞய்நினை நேசித்தன்பு
பூண்டா ரினத்தெளி யேனையுங் கூட்டிப் புரந்தருள்வாய்
காண்டா வனன்முதற் றேவர்கள் சோகங் களைக்களைந்த
தூண்டா மணிவிளக் கேதூய் குறுக்குத் துறைக்குகனே. (௨)

சிவையே யருளிய தேவே தெளிவு சிறந்தமணிக்
குவையே மகிழ்ந்தென் குடிமுழு தும்விலை கொண்டருள்வா
யிவையேயென் விண்ணப்ப மேன்றுகொள் வாயெளி யேனையுமின்
சுவையே சுகந்தரு வாழ்வே குறுக்குத் துறைக்குகனே. (௩)

அன்பங்க மாக வமைத்தறி யாவடி யேனெனினும்
நின்பங்க யப்பத மேகெதி யென்று நினைப்பணிந்தே
னென்பங்கம் பூணு மிறைக்கிறை வாயெளி யேன்வருந்துந்
துன்பங்கள் யாவுந் துடைத்தாள் குறுக்குத் துறைக்குகனே. (௪)

வாளா கழிந்தவென் வாணாளந் தோமயில் வாகனனே
நாளாயி னென்செய்கு வேனருள் வாய்முறை நானிடலைக்
கேளாது போலிருக் கின்றனை யேகிளர் கீர்த்தியனே
தோளா மணியின் சுடரோ குறுக்குத் துறைக்குகனே. (ரு)

டணையே புடைகொண்ட நெல்லையிற் றாம்பிர பரணியினூ
டிணையேது மின்றிய தேவே யிருட்கட லேகடத்தும்
புணையே புரையறி யாமணி யேநின்றன் பொன்மலர்த்தாட்
டுணையே துணையெனக் கேயாள் குறுக்குத் துறைக்குகனே. (சு)

எய்யாத துன்பக் கடல்மூழ்கி நெஞ்ச மிடிந்தெளியேன்
ஐயாவென் றுன்னடிக் கோலமிட் டேனதை யாற்றிவைப்பாய்
செய்யார்நெல் வேலித் திருவுரு மாமலைச் செல்வனெனுந்
துய்யா வடிவயிற் கையா குறுக்குத் துறைக்குகனே. (எ)

வெள்ளி மலைக்கா சின்றகந் தாவிளை மேவுகுழல்
வள்ளிதெய் வானைம ணாளாவென் றன்முக வாட்டங்கண்டுந்
தள்ளிவி டாதருள் வாயெளி யேனிடர் தானகற்றித்
துள்ளி வருமயில் வேலா குறுக்குத் துறைக்குகனே. (அ)

சேவற் கொடியுயர் செங்கரும் பேயெத் திறத்தவர்க்குங்
காவற் பதிக்கும ராவெளி யேனைத்தற் காவெனவே
கூவற்குன் பன்னிரு காதிலொன் றேனுங் கொடுத்தருள்வாய்
தூவற் கலாபத் துரையே குறுக்குத் துறைக்குகனே. (கூ)

இப்பார் தனிலிணை யில்கும ராவெளி யேன்மனதின்
வெப்பார் தருதுயர் யாவையு மாற்ற விரைந்தருள்வாய்
அப்பார் சடைமுடி யானரு ளாரமு தாமரசே
துப்பார் கருணைக் கடலே குறுக்குத் துறைக்குகனே. (ய)

(முற்றிற்று.)

---

உ

# சாத்துகவி

பண்பொழி

சண்முகசுந்தரம்பிள்ளையவர்கள்

இயற்றியது.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

தேவர்தொழுங்கழுகுமலைச்செவ்வேள்பாற்செவிகோயைச்செப்பித்
தீர,     மாவரம்பெற்றான்கன்னைநவஸ்டணிமுத்தருமைமகவாய்வந்த
காவலஷண்முகற்[illegible]ளையநல்லகண்ணின்முன்னுநித்தகாளைமிக்கப்
பாவலரும்புகழ்க[வி]சொல்தையல்பாகேந்த்ரன்முகிற் பான்மை
யோனே.

உ

சிவமயம்.

# கழுகுமலைக்கந்தர்பதிகம்

## காப்பு.

நேரிசைவெண்பா

சீரார் கழுகுமலைச் செவ்வே டிருப்பதத்தி
லேரார் பதிக மியற்றுவேன்—வாராரும்
பந்துமுலை யிந்துநுதற் பார்வதியா டான்பயந்த
ஐந்து கரத் தெந்தையரு ளால்.

## நூல்.

பூமேவுதண் கடற்போலமேவுபூமியிற்புகழ்மேவு சென்மங்களிற்
புத்திமிகுமானிடச்சென்மமேயரிததிற்புக்கியெனையேபுரந்த
தேமேவுஜோதியேயாதியேநீதிநிறைசெல்வமேசெம்மலேயிச்
சிறியனேன்றன்னையேயன்னையேவா[illegible]ன்
செவிநோய்தனைத்தவிர்த்தாள்
மாமேவுபொதியமாமலைமேவுபொருநைநதிவளமேவிமாதமூன்று
மழையேபொழிந்துநற்கழையேதழைந்திலகுமாடமாளிகைகள்
சூழுங்
காமேவுதண்டலைக்கொண்டலைக்கீறிநற்கனியேநிறைந்திலங்குங்
கன்னன்மொழிவள்ளிதெய்வானைபுயமருவுமுயர்கழுகாசலக்கந்தனே
பொல்லாதசேயினேனாயினுநாயினேன்புணாதவிர்த்தாள்வதுன்றன்
பொறுப்பனைமறுப்பதழகாகுமோகாணுநின்
புதல்வர்களிலொருவனலவோ
செல்லாததோவுரியநீதித்தலஞ்சென்றுசெப்பினுமிவ்வளக்குச்
சிந்தைவைத்தெந்தவிதமுங்கருணைகூர்ந்தெனது
செவிநோய்தனைத்தவிர்த்தாள்
வல்லாதசூரனைவதைத்துச்சிதைத்தண்டர்வன்றுயாகற்றிவெற்றி
மாலைமுடிசூடியகைவேலையணிசீலநின்மலரடிக்கன்புபூண்டோர்
கல்லாதவூமையேயாயினுமவர்க்கருள்கனிந்துகடல்போலளிக்குங்
கன்னன்மொழிவள்ளிதெய்வானைபுயமருவுமுயர்கழுகாசலக்கந்தனே

வண்டணிகுழற்பிறைநுதற்சிலைப்புருவம்விழி
வண்கமலமேகுவளைவாய்
மன்னுபவளந்தாளமுறுவல்வளைகந்தாமயற்சண்டமாருதஞ்செய்
செண்டணிமுலைத்துடியிடைத்தெரிவையார்தருஞ்
சிற்றின்பவலையிலாழ்ந்து
சிறியனேனலையாத வண்ணநீயருளியென்
செவிநோய்தனைத்தவிர்த்தாள் [ந்த
தண்டணிகரத்தநினையண்டினவர்பண்டுசெய்தவக்குறைவினால்விளை
சங்கடமிருந்துனைவருந்தியுரைசெய்பினவர்தங்களைக்காத்தல்கடமை
கண்டணிகதம்பணிகலாபமயின்மீதுவருகண்ணுதற்கினியசேயே
கன்னன்மொழிவள்ளிதெய்வானைபுயமருவுமுயர்
கழுகாசலக்கந்தனே. (௩)

மூவடியளந்துலகம்யாவையுமொருங்குகொண்
டுகுந்தன்முதலானதேவர்
முப்பத்து முக்கோடியானவருமறியாநின்மொய்ப்சடிக்கமலபாதச்
சேவடிதுதித்[illegible]மதித்தடிமையுய்யவுஞ்செய்தெவருமேதுதிக்கச்
சித்தம்வைத்தென்னிருசெவிக்குறையகற்றிநற்
சீர்சிறந்தோங்கவருள்வாய்
மாவடிவுகந்துகுறமாதினையடைந்துதினைமாவினைநுகர்ந்துமன்னும்
மயிலேறுகுகனேஷண்முகனேயெனத்துதிவழங்கிவளையேமுழங்கிக்
காவடியெடுத்துவிளையாடுபவர்கோடிநிறைகாவணப்பலவீதிசூழ்
கன்னன்மொழிவள்ளிதெய்வானைபுயமருவுமுயர்
கழுகாசலக்கந்தனே. (௪)

அங்கைகொடுமலரொடுத்தன்பினொடுநின்னிருவடிக்கணேசாத்திநாளு
மய்யனேதுய்யனேமெய்யனேயென்றுமெய்
யனலின்மெழுகாகவுருகிச்
செங்கைமுடிசாத்தியுனையேத்தியேவாழ்கின்ற
திறலளித்தின்னும்வேறு
சென்மங்களடையாதவண்ணமேயருளியென்
செவிநோய்தனைத்தவிர்த்தாள்
சங்கையணிபாணியணிசெங்கணெடுமாலுமந்தணனுமறியாதவேத

தத்துவசொரூபமுயாத்துவிதமானசிவசச்சிதானந்தமோன
கங்கையணிவேணியணிமங்கையொருபாகனருள்
கருணைக்கடற்கணமுதே
கன்னன்மொழிவள்ளிதெய்வானைபுயமருவுமுயர்
கழுகாசலக்கந்தனே. (௫)

முள்ளேறுபுண்ணெனவருந்துமெனைநின்கருணை
மொய்கழற்காளாக்கியே
முன்னின்றுகொண்டுநீயஞ்சலென்றொருமொழி
மொழிந்துகளிகூர்ந்துமஞ்ஞைப்
புள்ளேறுபுகழ்மேவுசெல்வமேயென்புணை
பொறுத்துமனமேயிரங்கிப்
புன்மையேனறியாததன்மையாலென்னைப்
பொருந்துசெவிநோய்தவிர்த்தாள்
வெள்ளேறுமீதேறுமதியேறுசடைமேவு
விரைமலர்ச்சென்னிவாய்ந்த
வித்தகற்கும்பிரணவத்தினதுபொருளுரைவிரித்தகுருமூர்த்தியான
கள்ளேறுநீபமணிமாலையணிமார்பனேகண்ணினுட்கரியபணியே
கன்னன்மொழிவள்ளிதெய்வானைபுயமருவுமுயர்
கழுகாசலக்கந்தனே (௬)

ஈயாதபுல்லர்தம்பாற்சென்றிரத்தலெந்நாளுமெய்தாதவண்ண
மிருநிலமொழிக்கநின்றிருவுளமிரங்கியேயிம்மைமறுமைக்குமேற்ப
மாயாதநலமேவுசெல்வமொடுஞானமும்வளம்பலவளித்தளித்து
வல்வினையகற்றியென்றொல்வினையிலுமெல்லை
வருத்துசெவிநோய்தவிர்த்தாள்
ஓயாததுன்பத்திலுழல்கின்றநாயினேற்குன்னடித்துணையலாம
லுள்ளபடியேவேறுதாரகமெனக்கிலையுளங்கனிந்தருள்புரியவே
காயாதமாமீதுகல்லெறிவிழுங்கொலோகருணைப்ரவாகவடிவே
கன்னன்மொழிவள்ளிதெய்வானைபுயமருவுமுயர்
கழுகாசலக்கந்தனே. (௭)

எங்குநிறைகின்றபொருளென்றநினைநாடினேற்
கென்றுமேயிடையறாத

வின்பசுகவாழ்வுநினதன்பரினமேவுமியலும்பலவளங்களீந்து
செங்குமுதவாய்முருகிதழ்க்கனிகைமார்கடருசிற்சுகத்தாழாமலே
செய்தெளியனேனையுங்குடியடிமைகொண்டெனது
செவிநோய்தனைத்தவிர்த்தாள்
கொங்குநிறையும்பலவினங்கனிகவர்ந்திடுகுரங்கினைவிரட்டமள்ளர்
கோடெடுத்தெறியவிளநீரொடுத்தெறியுநற்கோகிலக்குழுவமைந்த
கங்குகரையில்லாதகாவளநிறைந்திலகுகாமர்சேர்கழனிசூழுங்
கன்னன்மொழிவள்ளிதெய்வானைபுயமருவுமுயர்
கழுகாசலக்கந்தனே. (௮)

தஞ்சநினையன்றியொருதாரகமெனக்கிலைத்தாரணிமிசைதானுமதனைச்
சாமியறியாததாதாவுமறியாதசூல்தானுமுளதோவுலகினின்
செஞ்சரணமேசரணெனப்பணிந்தேனுனதுதிருவுளமிரங்கியென்றன்
றெவ்வர்களைவேரறுத்தின்னல்களைவித்தெனது
செவிநோய்தனைத்தவிர்த்தாள்
பஞ்சணிபதஞ்சலசையுந்தவளவாணியும்பரிவுடனமர்ந்துவாழும்
பார்ப்பிளையகஞ்சிறையணைத்தனப்பகுதிபலபந்தியாக்கண்படுக்குங்
கஞ்சமொடுசெங்குவளையுங்குமுதமுஞ்செறிகயம்பலகலந்திலங்குங்
கன்னன்மொழிவள்ளிதெய்வானைபுயமருவுமுயர்
கழுகாசலக்கந்தனே. (௯)

புண்ணியமெனப்புகல்வதைக்கனவிலுஞ்சிறிதுபுரியவறியேனாகினும்
போதொத்தநின்கமலபாதத்திலேயடிமைபுக்கினேனாதலாலே
யெண்ணியவென்னெண்ணமெல்லாஞ்சித்தியாகவரு
ளெளியனேற்கிந்துமின்னே
யெண்டிசையொலிக்கநல்லிசையெனக்கேநல்கி
யின்செவிக்குறைதவிர்த்தாள்
பண்ணியலமைந்தமறையுஞ்சசிமணாளனொடுபண்ணவர்நேககோடி
பாவுசரவணபவானந்தகுருநாதனேபரிமளமிகுந்தநீபக் [யே
கண்ணியணிமார்பனேபன்னிருகைவேலனேகணிவடிவெடுத்தகனி
கன்னன்மொழிவள்ளிதெய்வானைபுயமருவுமுயர்
கழுகாசலக்கந்தனே. (௰)

மறைநாலும்வாழிமுக்கணன்வாழியுமைவாழி
மாலயன்முதற்றேவர்கள்
வாழியாகமநெறிபுராணங்கள்வாழிவிண்மணியுமம்மதியும்வாழி
முறைமேவுமூவர்முதலடியார்கள்வாழிநன்முனிவரந்தணருமற்ற
மூன்றுவருணத்தவரும்வாழிமுறைதவாத
முடிமன்னர்தாமும்வாழி
நறைதோய்பொழிற்கழுகுமலைவாழிகுருவாழி
நற்றமிழும்வாழியிந்நூன்
நலமேவிவாழிகுகனயில்வாழிமயில்வாழிநங்கையிருபேரும்வாழி
கறைமேவுகந்தரச்சுந்தரக்கடவுளருள்கணபதியும்வாழிகாளுங்
கன்னன்மொழிவள்ளிதெய்வானைபுயமருவுமுயர்
கழுகாசலன்வாழியே. (௰௧)

முற்றிற்று.

உ

# சாத்துகவி.

பண்டிதர் ஷண்முகசுந்தரம்பிள்ளையவர்கள்
இயற்றியது.

நேரிசைவெண்பா.

சீராசைக் கோமதிபாற் செப்பியபா மாலையைப்போ
லாராலுஞ் சொல்ல லரிதரிது—காரான
துங்கமணி முத்தின்வழி தோன்றுஷண்மு கற்கிளைய
சிங்கதையல் பாகேந் திரன்.

உ

சிவமயம்.

# சீராசைக்கோமதியம்மன்பதிகம்.

## காப்பு

நேரிசைவெண்பா.

சுந்தரஞ்சேர் சீராசைத் துங்கமுயர் கோமதிமேற்
செந்தமிழி லேபதிகஞ் செப்பவே—முந்தவரு
காரணத்தி னன்மாங் கனிநுகராங் கைப்புனித
வாரணத்தின் றாளிணைகா வல்.

## நூல்

இரட்டையாசிரியவிருத்தம்.

காரோடுபொருவுங்கனங்குழலிளம்பிறைகறுக்குநுதல்வித்துருமவா
கயல்மீன்விழிப்பெரியமலையுநிகரோவெனக்கனசண்டமாருதஞ்செய் [ய்
வாரோடுகொங்கைமடவாரோடிணங்குமயல்வலைவாயகப்படாத
வண்ணமுநினைப்பணியெனெண்ணமுமளித்தெனை
வருத்துசெவிநோய்தவிர்த்தாள்

நீரோடுசெழனியினிறைந்தோடிவிளையாடிநெற்பயிர்தழைக்கவென்று
நெஞ்சமதுகளிகூர்ந்துழத்தியர்முழக்கவுயர்நீளிசைக்குரவையோசை
தேரோடுவீதியிற்சிறுவர்கிளைமுடனாடல்செயுமோசையோடொருவு
சீராசைகுடிகொண்டதுடிகொண்டதெய்வமே [ஞ்
திவ்யகோமதியம்மையே. (க)

அப்பரியபாலொடுசருக்கரைகலந்தநறுமமுதமேகுமுதவாயா [தே
லன்னையேயுன்னையேசதமென்றவென்னையேயஞ்சலென்றுணையளித்
ஒப்பரியநின்னிருகடைக்கணருணல்கியெனுளக்குறைவெலாமகற்றி
யும்பருக்கும்புகழ்செலும்படியமைத்தெனக்
குற்றசெவிநோய்தவிர்த்தாள்
துப்பரியவுப்பரிகையிற்படிநெறிப்புலவர்தொகுதியாவருமிழிந்து
தொழுதுனைவிரும்புவாமுழுதுமருள்கின்றபுகழ்
தொல்லுலகனைத்துமோங்குஞ்
செப்பரியபொற்புமிகுவற்புதமகுத்துவச்சித்துவிளையாடல்செய்யுஞ்
சீராசைகுடிகொண்டதுடிகொண்டதெய்வமே
திவ்யகோமதியம்மையே. (உ)

தன்னந்தனிப்புவியிலின்னம்பிறக்கவினைதன்னங்கருக்குழியிலே
சாராதபுத்தியுஞ்சோராதசித்தியுந்தமியனேற்கீந்துமேலும்
பென்னம்பெருத்தபுகழுன்னம்பதக்கிருபைபின்னம்படாமனல்கிப்
பெருமையுடனருமைமிகுசெல்வமென்றோதுபெயர்
பெற்றசெவிநோய்தவிர்த்தாள்
கன்னங்கறுத்தகுழலின்னம்புலிக்கணுதல்கன்னங்கணாடிநிகராங்
கயன்மீன்விழிப்பவளவிதழேர்சிலைப்புகுடிகதலிக்குயாந்தவுரு
சின்னஞ்சிறுத்தவிடையன்னஞ்சலிக்குநடை
தென்னங்குரும்பைமுலையாய்
சீராசைகுடிகொண்டதுடிகொண்டதெய்வமே
திவ்யகோமதியம்மையே. (ங)

கொள்ளத்தனத்தைவிலைவிள்ளக்களிக்குநனிகுள்ளப்பரத்தையர்மய
கொள்ளாமலாருமெனையெள்ளாமல்வாழக் [ல்
குணங்குறியமைத்துமென்ற
னுள்ளத்தெழுங்கவலைபொள்ளப்பெருங்கருணையுள்ளத்திரங்கியுலகி

ஞானமுளையாமலபிமானமதினாலெனக்குற்றசெவிநோய்தவிர்த்தாள்
வெள்ளத்தெழுந்துமிசைதுள்ளத்தென்னுந்திமடல்
விள்ளப்புடைத்தவாளை
மேகத்தெழுந்துமழையோகத்திழிந்துவருவேகத்திலேபூகம்வீழ்
தெள்ளத்தெளிந்தகூனைவெள்ளப்பெருக்கநிறை
செல்வச்செழிப்பமைந்த
சோலைகுடிகொண்டதுடிகொண்டதெய்வமே
திவ்யகோமதியம்மையே. (௪)

மன்னல்புரியுங்கவிதைபன்னல்வாழுங்கமலைமன்னலருளுஞ்சிறந்த
மாகனகமானபதகோகனகநீழலுறவாகனகவாய்மைதந்தென் [ன்
னின்னன்முழுதுந்துலையநின்னலருணல்கியுய
ரெங்கலமும்வாய்ந்துமெளியே
னீடேறவுங்கிருபைநாடோறுமேயளித்
தென்செவியினோய்தவிர்த்தாள்
துன்னல்புரியுஞ்சதுரசன்னனிறையும்பெரியசொன்னமயமானகூட
கோரணநிறைந்தமலாரணம்விரிந்தமதகூரணமிழிந்துபாயுஞ் [த்
செந்நெல்வயலுமினியகன்னல்வயலும்பசிய
தென்னைகிளைசேர்ந்திலங்குஞ்
சோலைகுடிகொண்டதுடிகொண்டதெய்வமே
திவ்யகோமதியம்மையே. (௫)

அன்னையேபிள்ளைபலகுற்றங்கள்செய்யினு
மவைபொறுக்காளாயின்வே [லோ
ரானைத்தாதாவுசெய்வர்சொல்யானுநின்னருளைமசனன்றுகொல்
நின்னையேசதமென்றுநம்பினேனைக்கைவிடினின்புசழ்க்சழகாருளோ
நிந்தையன்றோவெனக்கெந்தவிதமுங்கிருபை
நேர்ந்துசெவிநோய்தவிர்த்தாள்
முன்னையேதந்தவிரநின்னடிபணிந்துய்ய [கேன்
முயல்கையிலென்மூர்க்கநெஞ்ச
முன்னுக்கிழுக்கையிற்பின்னுக்கிழுக்கின்றமூடமதையென்சொல்லு
தென்னையோர்பொழில்தனிற்புன்னைநிழலமர்கின்ற
ஜெகதாம்பிகேசிறந்த
சோலைகுடிகொண்டதுடிகொண்டதெய்வமே (௬)
திவ்யகோமதியம்மையே.

பன்னகயனெனைக்கருவிலங்கையி னுருப்படிசெய்
    பங்கமறவேபணிந்துன்
பாதமொருபோதுநினையாதவெளியேற்குமொரு
    பாதகம்வாராமலேயெச்
சங்கையறவுஞ்சுமுழு துங்கையுறவுங்கருணை
    தங்கவரம்யாவுமீந்தென்
சஞ்சலமகற்றியபயஞ்சலிசளித்துமென
    தஞ்செவியினோய்தவிர்த்தாள்
கங்கையணியுஞ்சடிலர்கங்கையணியோடிரு
    கங்கையணியுங்கவர்ந்து
காமமிகவாகியவர்வாமநிதமேவிவளர்காமர்மிகவேசிறந்த
செங்கைவடிவேன்முருகதுங்கனையளித்தநா
    சிங்கவதனன்றங்கையே
சீராசைகுடிகொண்டதுடிகொண்டதெய்வமே
திவ்யகோமதியம்மையே. (எ)

நித்தனையனாச்சடமிழைத்தனைவனாக்குழிஜெநித்தனையதாலுனக்கு
நெஞ்சமதுகல்கொலோதஞ்சமெனவேநாளுநின்சரணநாடினேனுக்
கெத்தனைபெருங்கவலைவைத்தனையொருத்தனு
    னித்தனைக்காளாவனோ
இன்னமுமெனைத்துயரகண்ணவும்வையாதருள்செய்
தென்செவியினோய்தவிர்த்தாள்
கத்தனைவெண்ணீறணிநிறத்தனையொண்மேவுமைமு
    [illegible]த்தனைமருங்கமைத்த
கன்னல்ரசமேயினியமின்னலொளிவேமனதுகன்னலறியாமலேநே
சித்தனையெனப்புவனமத்தனையுமாட்சிசெய்
செல்வமேசித்தர்போற்றுஞ்
    சீ[illegible]சைகுடிகொண்டதுடிகொண்டதெய்வமே
திவ்யகோமதியம்மையே. (அ)

நல்லாரிணக்கமுமதில்லார்வணக்கமுமொன்னல்லாருணக்கமுஞ்சேர்
ஞானமுமெனக்குனபிமானமுமளித்துமைஞ்
    ஞானமுமொழித்துநாளும்

இல்லார்தமக்குமதிவல்லார்தமக்குமறவெல்லார்தமக்குமுதவ
ஏராளமானபொருடாராளமாய்நல்கி
யென்செவியினோய்தவிர்த்தாள்
அல்லார்குழற்பொலிவினல்லார்மனக்கன்மச
மல்லாரினங்கள்பலவு
மாடவருடன்கவிதைபாடவுநன்னீரில்விளையாடவுமொருங்குகூடுஞ்
செல்லார்பொழிற்குழுவினெல்லாரெழிற்பதவி
செல்லாரியத்துயர்ந்த
சீராசைகுடிகொண்டதுடிகொண்டதெய்வமே
திவ்யகோமதியம்மையே. (௯)

நீரணிமதிச்சடையிலாரணியிடைக்கமழ்பன்னீரணிவிடைக்கடவுளா
நித்தியமிருத்திணைவயித்தியம்புரியுசாநித்தியமுனக்கிருந்துந்
தாரணியிலென்பிணிதவிர்க்கவொருபச்சிலைச்சாரணியதாகவிலையோ
தண்ணழிதழைக்கடைக்கண்ணருளளித்தெனது
தண்செவிக்குறைதவிர்த்தாள்
வாரணியசம்பையர்களாரணியினூடமரர்மாரணிவகுத்துவந்துன்
வந்தனைசெயும்படிநிபந்தனையினோடவர்தவந்தனைவளர்ப்பதனாற்
சீரணிவயற்புறவினோரணிமிகப்பொலிவுசேரணிசெழிக்கவோங்குஞ்
சீராலசகுடிகொண்டதுடிகொண்டதெய்வமே
திவ்யகோமதியம்மையே. (௰)

பண்கொண்டநான்மறைபுராணமாகமம்வாழிபாரதியகிலமெல்லாம்
பரவுசங்கரலிங்கநாதனுதினம்வாழிபங்கயனுமாலுமூன்று
கண்கொண்டகணபதியுமறுமுகனும்வாழிபுங்கவர்வாழிகாழிதக்க
கவுணியன்முதற்பரமசிவனடியர்வாழியிக்காசினியில்வேந்தர்வாழி
விண்கொண்டதேவர்கடமக்கானவேள்விசெய்
வேதமனுதினமோதிடும்
விப்பிரர்முதற்சாதிநால்வர்களும்வாழிநலமேவியிந்நூலும்வாழி
திண்கொண்டமதில்கள்புடைசூழ்ந்திலங்கும்பெரிய
சிகரிசேர்கோவில்வாய்ந்த
சீராசைகுடிகொண்டதுடிகொண்டதெய்வமாந் (௰௧)
திவ்யகோமதிவாழியே.

முற்றிற்று.

# பிழை திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 3 | 8 | யாயன் | யாயயன் |
| 5 | 15 | சேய்பி | செய்பி |
| 8 | 18 | [illegible]டிலற் | காடிலர் |
| ஷை | 28 | தூரந்தா | றூரந்தா |
| 10 | 13 | வீணின்மபி | வீணினம்பி |
| 11 | 19 | சேந்தாமமை | செந்தாமமை |
| 12 | 3 | ளுட்ர் | ளுடர் |
| ஷை | 28 | சாஸ்வதி | சாஸ்வதி |
| 16 | 10 | விஷ்டுவானவர் | விஷ்டுனுவானவர் |
| 20 | 21 | நிங்க | நீங்க |
| 22 | 8 | தாராய | தாராய் |
| ஷை | 15 | னின்ற | நின்ற |
| [illegible] | 25 | நீள்விதி | நீள்விழி |
| 54 | 12 | ஒசயிந்தா | செயிந்த்ர |
| 6[illegible] | 22 | சூழ | சூழ் |